...க் கழக

# தலைவர்களின் வாழ்க்கையில்!..



ஆசிரியர்:

என். ஏ. வேலாயுதம்,

## தமிழரசுக் கழக

# தலைவர்களின் வாழ்க்கையில்!





தொகுத்தவர்:

**என். ஏ. வேலாயுதம்,**

நாகர்கோவில்.



வெளியீடு:

**அன்பு நிலையம்,**

அலக்சந்திரா ரோடு,

நாகர்கோவில்.

1957 ஜனவரி–26






'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

ஜோதி அச்சகம், நாகர்கோவில்.

# முகவுரை.

பிறந்த நாட்டிற்கும், பேசும் மொழியாம் தாய் மொழி வளர்ச்சிக்கும் தொண்டு செய்யாமலே தலைவர்களாகி, தன் மனம் போன வழி நடக்கும் தலைவர்களையும், நான்கு திரைப்படத்திற்கு வசனம் எழுதி நான்கு புராணங்களை அப்படியே காப்பியடித்து, அது குற்றம், இது வெறும் பொய், என்ற சொற்களை மட்டும் தன் சொந்த கற்பனையால் எழுதி தலைவர்களாகி இருப்போரையும் நாம் காண்கிறோம்.

ஆனால் இந்நூலில் இடம் பெற்றிருக்கும் தமிழரசுக் கழகத் தலைவர்கள் மேலே குறிப்பிட்டிருக்கும் பட்டியலில் சேர்க்க முடியாதவர்கள் என்பதை நாட்டு மக்கள் நன்கறிவார்கள்.

வெள்ளையர்களின் ஏகாதிபத்யத்தை எதிர்த்து, இந்திய விடுதலைக்காக அரும்பாடுபட்டு, சொல்லொணா துயரமடைந்து, தியாகத்தழும்புகளை பரிசாகப் பெற்ற பண்பட்ட தியாகிகள்! இந்திய சுதந்திரத்திற்குப் பின், தமிழகத்தின் சுதந்திரத்திற்காக, தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக தன்னை அர்ப்பணித்த தவப்புதல்வர்கள்தான் இதில் இடம் பெற்றிருக்கிறார்கள், நாடறியும்! தமிழன் ஒவ்வொருவரின் இதயமும் இதை வரவேற்கும்.

இதில் இடம் பெற்றிருக்கும் ஒவ்வொரு தலைவரைப் பற்றியும் குறைந்தது நூறுபக்கங்களாவது எழுதலாம். உதாரணமாக தமிழர்களின் தனிப்பெரும் தலைவர் திரு. ம. பொ. சி. அவர்களைப்பற்றி எனக்குத்தெரிந்த மட்டில் எழுதினாலும் முன்னூறு பக்கங்களாவது எழுத முடியும். அந்த அளவுக்கு தலைவர் திரு. ம.பொ.சி. அவர்களின் கடந்தகால தியாக சரித்திரம் வழிகாட்டுகிறது.

ஆனல் இந்நூலில் தலைவர்களின் வாழ்க்கை, சுருக்க மாகவே இடம் பெற்றிருக்கிறது. தலைவர்களின் படங் களும் ஆங்காங்கே இடம்பெற்றிருக்கிறது. எனக்கு கிடைத்த சில விபரங்களை வைத்தே எழுதியிருப்பதால் இந்நூலில் இடம் பெற்றுள்ள தலைவர்களின் தியாகத் தொண்டுகள், மக்களுக்கு, செய்த சேவைகள் ஒருசில விடப்பட்டிருக்கலாம்.

தமிழரசுக்கழகத்தின் தூண்களான எல்லாத் தலை வர்களையுமே அறிமுகப்படுத்தவேண்டும் என்ற அளவு கடந்த ஆசையினல்தான் இந்நூலை வெளியிட முன் வந்தேன். ஆனலும் "ஐம்பதை எண்ணினல், ஐந்துதான் கிடைக்கும்" என்றபடியில்லாமல் என்னல் முடிந்த வரை முயன்று வெற்றி கண்டேன்.

என்ருலும் தமிழரசுக்கழகத்தில் எல்லாத் தலைவர் களும் இதில் இடம் பெறவில்லையே என்ற வருத்தம் எனக்கு உண்டு.

இந்நூலுக்கு மக்களிடம் கிடைக்கும் ஆதரவைக் கண்டு எனது அடுத்த வெளியீட்டில் தமிழரசுக்கழகத்தின் தலைவர்கள் எல்லோரையும் ஒன்று சேர்த்து பெரிய அளவு நூலாக வெளியிடத் தீர்மானித்திருக்கிறேன். என் முயற்சி மேலும் வெற்றிபெற தமிழகத்தின் ஆதரவையும் தலைவர்களின் ஆதரவையும் வேண்டுகிறேன்.

என்னுடைய முதல் முயற்சியான இந்நூலுக்கு சிறப்புரை தந்து இந்நூலையும், என்னையும் சிறப்பித்த பெரியார்கள், சென்னை முன்னுள் ஆஸ்தான கவிஞர், நாமக்கல் திரு. வெ. ராமலிங்கம் பிள்ளை, **M. L. C.** அவர்களுக்கும், நாஞ்சில்- திரு. **M.** சங்கரலிங்கம் **B. A.** அவர்களுக்கும் என் **இதயபூர்வமான** நன்றியை வணக்கத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

*நாகர்கோவில்,*
22—1—1957.

**என். ஏ. வேலாயுதம்.**

# மதிப்புரை.

தமிழ் நாட்டின் சரித்திரத்தை ஆராய்ந்து, பழந் தமிழர்களின் உயர்ந்த கொள்கைகளை உணர்ந்து, அதற்கிணங்கப் பழைய தமிழிலக்கியங்களுக்குப் புது முறையில் விரிவுரை பேசி, தமிழர்கள் தம்முடைய முன்னோர்களின் சிறப்புகளை உணரச் செய்து, தமிழ் இனங்களுக்கெல்லாம் நல் வாழ்வு மலரவேண்டும் என்பதே மூச்சும் பேச்சுமாகத் தன்னலம் கருதாமல், காந்தீய சாந்த சத்திய சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஓயாது உழைத்து வரும் திரு. ம.பொ. சிவஞானம் அவர்களைப் பற்றியும் அவருக்குத் துணைவர்களாக அவர் நடத்தி வரும் 'தமிழரசுக் கழகத்'தில் அரும் பணி புரிந்து வரும் இளந்தலைவர்களைப் பற்றியும் தாங்கள் வெளியிட்டுள்ள இந்தத் தொகுப்பு நூல் மிகவும் பாராட்டத்தக்கது.

எனது அருமை நண்பர் ம. பொ. சி. அவர்களுடைய குறிக்கோள்கள் ஒவ்வொன்றாகக் கைகூடி வருவதைக் கண்டு தமிழ் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சியடைந்து, மேலும் மேலும் அவரை வாழ்த்தி உத்ஸாகப்படுத்துவார்கள் என்பதில் ஐயமில்லை.

அவருடைய நேரிய தலைமையின் கீழ் 'தமிழரசுக் கழகம்' நாளுக்கு நாள் வளர்ந்தோங்கி

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

என்றும்,

'ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று'

என்றும் முழங்குகின்ற தமிழ்ப் பண்புகளை எங்கெங்கும் பரப்பித் தமிழரசு, உலக சமாதானத்துக்காக உழைக்கும் இந்திய அரசாங்கத்துக்கு இணையற்ற துணையாக இலங்கச் செய்யும் என்று மனமார வாழ்த்தி இறைவனை வணங்குகின்றேன்.

நாமக்கல்,
17–1–'57.

அன்புள்ள,
வெ. இராமலிங்கன்.

# சிறப்புரை.

இந்தியப் பெருநாட்டின் விடுதலைக்கு வழி பிறந்தபின், தமிழினத்தின் பிறப்புரிமையாம் சிறப்புரிமைகளைப்பெற்று கூட்டாட்சியில் பிரியும் உரிமையுடன் கூடி வாழ வழிவகுக்க வேண்டியது தமிழினத்தின் கடமையாகும். இந்திய விடுதலைக்கு உழைத்த தேசீயத்தமிழர்கள், ஒற்றுமைக்கு பங்கமென தவறாகப்புரிந்து வாளாயிருந்தனர். விடுதலை இயக்கத்திற்கு எதிராக உழைத்த சிலரின் தனித்தமிழரியக்கத்திற்கு மக்கள் ஆதரவு அளிக்கவில்லை. இந்நிலையில் தேசீயப்போரில் பெரும் பங்கு கொண்ட திரு. ம. பொ. சி அவர்கள், தமிழினத்தின் உரிமைகளைப்பெற தமிழரசுக் கழகம் கண்டார்கள். உரிமை உணர்ச்சிபெற்ற வாலிபப் படையை திரட்டினார்கள். தமிழ்நாட்டின் வட, தென் எல்லைகளைப் பாதுகாத்து தமிழ்மொழியாம் தாய்மொழியை ஆட்சிபீடத்தில் அமர்த்தி, வருங்கால வேலைத்திட்டத்தை வகுக்க சேலத்திலே கழக வீரர்கள் கூடும் இந்நன்னாளில், இப்பெரும் பணிக்காக உழைத்த-உழைக்கும் வீரர்களை அறிமுகப்படுத்தும் இவ்வழகிய நூல் பலவாற்றாலும் வரவேற்கத்தக்கதே.

குமரி மாவட்ட தமிழரசுக் கழக ஊழியராகிய நண்பர் என். ஏ. வேலாயுதம் அவர்கள் கழகப் பற்றும் கடமையுணர்ச்சியுமுடையவர்; தன்னலங் கருதாக் கழகத் தலைவர்களுக்குத் தானாற்றும் கைமாறென இந்நூலை வெளியிடுகிறார்கள். இம்முயற்சி அன்னவர்க்குப் புதிதெனினும், இந்நூலைத் திறம்பட ஆக்கி வெளியிட்டது நண்பர் என். ஏ. வேலாயுதம் அவர்களின் திறமையின் எடுத்துக்காட்டு. இந்நூலை வெளியிடும் நண்பர் அவர்களுக்கும், இந்நூலால் அறிமுகப்படுத்தப்படும் தலைவர்களுக்கும் என் வணக்கத்தையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நாகர்கோவில்,<br>
20—1—1957.

M. சங்கரலிங்கம் B. A.



## தமிழருக்காகத் தன் வாழ்வை அர்ப்பணித்த
# தலைவர்: ம. பொ. சி.

வாழ்கநீ எம்மான் இந்த
　　வையத்து நாட்டி லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
　　விடுதலை தவறி கேட்டு
பாழ்பட்டு நின்றதா மோர்
　　பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
　　மகாத்மா! நீ வாழ்க!! வாழ்கவே!!!

[பாரதியார்]

**ஆம்! அன்று மகாகவி பாரதியார் வாழ்ந்தார். மகாத்மா காந்தியை வாழ்த்தினர்! இன்றும் வாழ்ந்திருந்தால், அந்த வாழ்த்துப்பாவில் ஒரு எழுத்துக் குறையாது திரு. ம.பொ. சி. இடம் பெற்றிருப்பார். நெஞ்சில் உரம், நேர்மையில் திறம், உண்மை தியாகம் உடையவர்கள் ஒவ்வொருவரும் மகாத்மாவாக ஆகமுடியும்! அவ்வகையில் இந்தியத்தாய் பரிபூர்ண பாக்கியம் பெற்றவள்.**

அவள் உதிரத்தினின்றும் ஆயிரம் ஆயிரம் வீரப் புதல்வர்கள் உதித்தனர்! இலட்சியம், கடமை, தியாகம் இவைகளே உடலாகவும், உயிராகவும், உள்ளமாகவும் பெற்றனர் அப்புதல்வர்கள்!

மகா கவி பாரதியார் வாழ்த்தி, வரவேற்கும் வண்ணம், ஒளிபடைத்த கண்களும், உறுதிகொண்ட நெஞ்சும் கொண்டு, களி படைத்த மொழியோடு, கடுமைகொண்ட தோளோடு தெளிவுபெற்ற மதியோடு, சிறுமைகண்டுபொங்கும் உளமாய்! எளிமைகண்டு இரங்கும் உயிராய் ஏறு போல் வீறுகொண்டெழுந்தனர், அவ்வீரப்புதல்வர்கள்.

அன்று அந்த அணியில் மகாத்மா காந்தி முன்னணி வீரராக திகழ்ந்தாராயின் இன்று அந்த அணியின் இறுதி வீரராக திகழ்ந்து ஒப்பற்று விளங்குகிறார் வீரர் திரு. ம. பொ. சி.

ஆயிரத்தி தொள்ளாயிரத்து ஆறும் ஆண்டு சென்னையில் சால்வான்குப்பம் என்ற பகுதியிலே திரு. ம. பொ. சி. பிறந்தார். ஏழைக் குடும்பத்தில் பிறந்த திரு. ம. பொ. சி. கல்வி அதிகம் பயிலவில்லை. உலகமே பள்ளியாகவும் பெற்றோரே ஆசிரியர்களாகவும் ஆனார்கள்.

"செய்யும் தொழிலனைத்தும் சீர்தூக்கி நோக்குங்கால் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை" என்ற வள்ளுவர் வாக்குப்படி திரு. ம. பொ. சி. பத்து வயதிலேயே நெசவுத் தொழிலில் புகுந்தார். பதினைந்தாம் வயதில் அச்சுத்தொழிலாளியானார். 1927-ம் ஆண்டு காங்கிரஸ் மகாசபை வெற்றிகரமாய் நடக்க அரும் பாடுபட்டார். 1928-ல் கமிஷன் பகிஷ்காரத்தில் கலந்ததற்காக திரு. ம. பொ. சி, முதலாவதாக கைது செய்யப்பட்டார். 1930-ல் உப்பு காய்ச்சியதால் கசையடியும் சிறைத்தண்டனையும் அடைந்தார்.

1932-ல் வெள்ளை அரசாங்கத்தை எதிர்த்து, துண்டு பிரசுரம் வெளியிட்டதற்காக ஆறு மாத கடுங்காவல் தண்டனை பெற்றார். ம. பொ. சி-யின் தீவிர நடவடிக்கை

களைக்கண்ட அரசாங்கம் திரு ம. பொ. சி.யின் மீது 144 தடை விதித்தது. ஆனால் திரு. ம. பொ. சி, தடையை மீறி 26-6-32-ல் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்திற்கு தலைமை வகித்தார். அதன் காரணமாக மீண்டும் கைதுசெய்யப்பட்டார். ஒரே ஆண்டில் எத்தனை தடவைகள் சிறைத் தண்டனை!

1934-ல் "தமிழ்நாடு" அச்சகத்தில் நடைபெற்ற வேலை நிறுத்தத்தைத் தலைமைதாங்கி நடத்தி, அதன் காரணமாக தொழிலை துறந்து வெளியேறினார். காங்கிரஸில் இருந்த 26 ஆண்டுகளில் காங்கிரஸ் நடத்திய, உப்பு சத்யாக்கிரகம், ஆகஸ்டு புரட்சி, சட்டமறுப்பு இயக்கம், தனி நபர் சத்தியாக்கிரகம், மதுக்கடை மறியல் போன்ற பல போராட்டங்களில் ஈடுபட்டு, சிறைவாசமும், தடியடியும் தாங்கி பலவித துன்பங்களுக்கு ஆளானார். வெள்ளையனின் ஏகாதிபத்திய வெறி ம. பொ. சி-க்கு கடும் நோயை உண்டாக்கியது. நோயால் உடல் துரும்பாக இளைத்துவிட்டது. உடல் துரும்பானாலும் உள்ளம் இரும்பாகவே இருந்தது.

சிறையிலிருந்தும், நோயிலிருந்தும் குறையான விடுதலை பெற்று வெளிவந்தார். 1948-ல் சென்னை கார்ப்பரேஷன் ஆல்டர்மேனாக தேர்ந்தெடுக்கப்பெற்றார். அன்றே சென்னை மாகாணம் தனியாக இருக்கவேண்டுமென்ற தீர்மானம் கொண்டுவந்து, ஏகமனதாக நிறைவேற்றினார். இவை போன்ற எத்தனையோ விஷயங்களை, அவை வருமுன்பே தெரிவித்திருக்கிறார், திரு. ம. பொ. சி. அன்று கூறியதே இன்று நடந்துவருகிறது. ஆகவேதான் அரசியல் தீர்க்கத் தரிசி என்று பாராட்டப்படுகிறார்.

1949-ல் இலங்கைக்குச் சென்று, அங்குள்ள தொழிலாளர்களின் சார்பில் இலங்கை அரசாங்கத்தின் கொடுமைகளைக் கண்டித்துப் பேசினார். அதைக் கண்டு இலங்கை அரசாங்கம் நடுங்கி, நம் அரசாங்கத்திடம் ஓலமிட்டது.

1951-ல் குமரியில் நடைபெற்ற எல்லை மாநாட்டில் கவிமணியின் தலைமையில், "குமரியை கொள்ளைகொடோம்" என்று தெற்கெல்லையில் நின்று வீரமுழக்கம் செய்தார் திரு. ம. பொ. சி.

தென் தமிழக மக்களின் இன்னல்களை எடுத்துக் காட்டிய அரசியலமைப்பாம் தி. த. நா. காங்கிரஸிற்கு திட்டம் வகுக்க தாய்த்தமிழகத்திலிருந்து தாவியோடி வந்த தமிழ்க் காவலன் ம. பொ. சி-யின் வீர உரை கேட்ட தென் குமரி மக்கள் மயிர்கூச்செறிந்தனர். உணர்ச்சி வெள்ளம், அம் மாநாட்டிலே கரை புரண்டோடியது. "குமரியை கொள்ளை கொடோம்" என்று கூறிய அந்த உணர்ச்சியுரை 1956 நவம்பர் முதல் தேதி நிறைவேறி விட்டது. அன்று எல்லைமாநாட்டிலே தேவிகுளம்பீர்மேட்டை மீட்டே தீருவோம் என்று திரு. ம.பொ.சி. கூறவில்லையோ. கூறி இருந்தால் அந்தப் பொன்மொழியும் அழியாத வெற்றி பெற்றிருக்குமே என்ற ஐயப்பாடு தோன்றுகிறது, அந்த அளவுக்கு எதிர்கால அரசியலைத் திட்டம் தீட்டிக் கூறும் நாவுண்டு திரு. ம. பொ-சிக்கு என்று உறுதி கொண்டவர்கள் தமிழ் மக்கள்.

வெற்றிதினமென 1956 நவம்பர் முதல் தேதியை தி. த. நா. காங்கிரஸாரும், இரண்டாம் நாள் தி.மு.க-வும், 3-ம் நாளை கம்யூனிஸ்டு கட்சியாரும் கொண்டாடினர். இதை யறிந்த திரு. ம. பொ. சி, சென்னையிலிருந்துகொண்டே நவம்பர் நாலாம் நாளை தேர்ந்தெடுத்தார். இணைப்பு தினம் கொண்டாட. ஏன்? ஒரே நாளில் இரு கட்சிகளின் கொண்டாட்டம் கட்சிப் பூசலை உண்டாக்கும் என்ற எண்ணத்தால், அந்த அளவுக்கு பெருந்தன்மை படைத்த பெரியாராய் விளங்குகிறுர் ம. பொ. சி.

நவம்பர் 4. நகரசபை திடலில் நாலா பக்கங்களிலும் மனித சமூகம். ம. பொ. சியின் மணிமொழிகளைக்கேட்க மக்கள் சமுத்திரமே திரண்டிருந்தது. வெற்றி முழங்கும் வீர

முழக்கம் கேட்கத்துடித்து நின்ற மக்களுக்கு ம. பொ. சி. எழுந்தவுடன், எல்லோரும் கொண்டாடினார்கள் வெற்றி விழாவை. முதல்நாள் கடமையால் காமராசர் கொண்டாடினார். உரிமையால் கொண்டாடுகிறோம் நாம் என்று கூறினார் உங்களிடம் வரவேற்புப் பெற நான் வரவில்லை! உங்களை வரவேற்கவே வந்திருக்கிறேன்" என்றார். இந்த வார்த்தைகளில்தான் என்ன அமைதி! எத்தனை பொருள்ச் செறிவு! பொதுவாக தீர்க்கதரிசனத்தால், தெளிவுறு கருத்துக்களால், இலக்கிய ரசனையால், எதிர்ப்பாளர்களுக்கு அளிக்கும் பதிலால் தமிழ் மக்களின் இதயத்திலே நீங்காத இடம் பெற்றுவிட்டார் திரு. ம. பொ. சி. அவர்கள்.

அரசியலையும் இலக்கியத்தையும் இணைத்துக்காட்டிய இலக்கிய மேதை திரு. ம. பொ. சி. சிலப்புச்செல்வர் என்று அழைக்கப்படும் தேசீய வாதி. கப்பலோட்டிய தமிழனையும், தியாகி கட்டபொம்மனையும் நாட்டிற்கு அறிமுகப்படுத்திய அண்ணல். பாழ்ப்பட்ட தமிழகத்தை பண்படுத்த வந்த பகலவன். எனது இனப்பெயர் தமிழன், எனது தாய்நாடு தமிழ்நாடு, எனது கோரிக்கை தமிழரசு எனது கொள்கை சமதர்மம், எனது குடும்பம் இந்திய சமுதாயம் என்று தமிழகத்திற்கு உபதேசித்த மகாத்மா திரு. ம. பொ. சி.

மக்களுக்காக வாழும் திரு. ம. பொ. சி. இன்னும் பல்லாண்டு வாழ்ந்து. தமிழகத்தை இன்பப்புரியாக்க மக்களுக்கு ஊக்கமும்- உற்சாகமும் தந்து நல் வழியில் அழைத்துப் போகட்டும்!

வாழ்க! ம. பொ. சி. வருக, தமிழரசு. வாழ்க! வாழ்கவே!

## வடவெல்லைத் தளபதி:

# K. விநாயகம் M. L. A., M. A. B. L., F. R. C S. (London.)

தமிழன்னையின் வலக்கரமாம் வேங்கடத்தை நோக்கி தலைவர் ம. பொ. சி-யின் மனப்புயல் விரைந்து சென்ற நோத்திலே, 'வலக்கரத்தின் விலங்ககற்றவே வாழுகின்றேன் யான்' என்று வானதிர முழக்கமிட்ட வீரர், ஆந்திர ஆட்சியின் அட்டூழியத்தால் தமிழினத்தின் தரங்குன்றி தாழ்வுற்ற நிலைகண்டு மனங்கொதித்து மானங் காக்கப் புறப்பட்ட தீரர், திருத்தணித் தாலுகாவிலுறைகின்ற தமிழர்களின் உள்ளமதைத் திறந்து தமிழமுதைத் திணித்து விழிப்புறச் செய்த அறிஞர். வீர சிதம்பரத்தையும், கட்டபொம்முவையும் தமிழ் தந்த தவப் புதல்வர்களையும், அவர்கள் விட்டுச்சென்ற வீரக் கவிதைகளையும் வெளிக் கொணர்ந்து வடவெல்லைத் தமிழர்களின் வாழ்வையே திருத்தியமைத்த அரசியல் சிற்பி.



உருவத்தில் உரம் மிக்கவராயினும் உள்ளத்தில் பசுமை கொண்ட உத்தமர். முதல் முறை காண் பவரின் உடல் விறைக்கும் பார்வையும், முற்ற முழுக்க அசட்டையும் காட்டி, உரையாடல் நிலை வந்ததும் உவகை யுற்று உளம்மகிழ உரைநிகழ்த்தி ஆச்சர்யத்திலாழ்த்திவிடும் அமைதி நிறைந்தவர். தமிழ் மொழியை மறக்குமளவிற்கு ஆந்திரத்தையும், ஆங்கிலத்தையும் கற்றிருந்தும், தன் மொழி, தன் கலாச்சாரம், தன் இனம் இவைகளுக்குத் தாழ்வு வந்த தறிந்தவுடன் மனம் துடித்து வீறிட்டெழுந்த உணர்ச்சிப் பெருக்கு. ஆந்திரமே நிறைந்திருந்த அருந்தமிழ்ப் பகுதி யிலே நின்றுகொண்டு, பெரும்பான்மைத் தமிழ் மக்கள் வாழுகின்ற பூமியிது என்ற நிலை புலர்த்தி, தேர்தலிலே போட்டியிட்டு, சரித்திரச் சான்றுணர்த்தி, வாகை சூடி, வழக்குரைக்க வகை தேடி வழி வகுத்த வாய் வீரர். அரசி யல் போக்கின்றி, தனிக் கலாச்சாரக் கழகமாய்ச் செயற் பட்டு வந்த தமிழரசுக் கழகத்தின் உட்கருத்தைச் சென்னை மாநில சட்டசபையிலே சிம்மக் குரல் விடுத்து, அமைச்சர் களும் செவிமடுக்கச் செய்த செயல்வீரர். நீண்ட நாள் காங்கிரசில் செயல்பட்டும் அங்கு குறை கண்டவுடன் தானே வெளியேறி, தன் சிந்தனையின் உயர்ந்த முடிவாய் தமி ழரசுக்கழகக் கொள்கைகளை ஏற்று, தலைவர் ம. பொ. சி-யின் மணிமொழியைப் பின்பற்றி, தமிழுக்காகத் தமிழ் நாட்டின் உயர்வுக்காக தன்னையே அர்ப்பணித்த கடமை வீரர். "வெந்தழலில் வீழ்ந்துபட்டாலும் செந்தமிழை நான் மற வேன்" என்று எல்லை மீட்புக் களத்திலே குதித்த ஏறு. வடவெல்லை மீட்சிப் போருக்கு முதல் சர்வாதிகாரியாகப் பொறுப்பேற்றுத் திறம்படப் போரிட்டுத் தமிழகத்தை விழிப்புறச் செய்து, "என்னைக் கைது செய்து இந்த அர சாங்கம் சிறையிடுமானால், இன்பத் தமிழகத்தின் எல்லை மீட்சிப் போராட்ட வேலை எளிதிலே முடிந்துவிடும்" என முழக்கமிட்ட இனக் காவலர். "வேங்கடம் எமது வட வெல்லை" வேங்கடத்தை மீட்பதே என் கடமை" வேங்க டம் இன்றி வேயாது வியனுறு தமிழகம்" என்று இன்று வரை சென்ற இடமெல்லாம் சிறப்புரை நிகழ்த்தி வரும்

செம்மல். யார்? இவர்தான் இளமை குன்றாத் தமிழன்னைக்குத் திருப்பதியெனும் மணிமுடியைச் சூட்டி மகிழ்ந்து, தமிழன்னையுடன் விளையாட வினையாற்றும் வீரத் தளபதி கே. விநயகம் என்ற வள்ளல். அவர்தம் வீரவுரை விண்ணதிர விளக்கவுரையாய்க் கேட்டோம் நாஞ்சில் மாவட்ட தமிழரசுக் கழக மாநாட்டு மேடையிலே. மேலும் தமிழக இணைப்பு விழா அரங்கிலே கேட்டோம் அவர்தன் அறிவுரையை— "கூடுகின்ற தென் தமிழ்ப் பகுதியின் பிரதிநிதி சென்னைச் சட்டசபையிலே இல்லை என்றெண்ணாதீர்! இருக்கிறேன் விநயகம் இங்குள்ள குறை நீக்க" என்ற அவர் உரிமைக் குரல் கேட்ட குமரி மாவட்டம் உணர்ச்சிப் பெருக்கால் மயிர்க்கூச்செறிந்து மகிழ்ந்தது. தென் தமிழக மாணவர்களின் பிரயாணத்தில் ஏற்பட்ட இன்னல்களைச் சென்னை சென்றவுடன்தானே தெளிவுபடுத்தி அரசாங்க பஸ்களிலே அமைதியுடன் பவனி வர அமைப்பு வகுத்து மாணவர்களின் அன்பையும் பெற்ற வட எல்லைக் காவலன் கே. விநயகம் என்பதைத் தமிழ் மக்கள் இதயம் என்றும் மறவாது. வாழ்க அவர் தொண்டு!



# கழகத் தூண்

# கவிஞர்—கா. மு. ஷரீப்.



உரிமைக்காக, கடமையுணர்ச்சியுடன் போராடி வரும் தமிழரசுக் கழகத் தூண்களில் முன்வரிசையில் நிற்கும் முதன்மையான தூண்! இலக்கியத் துறையிலே ஆராய்ச்சி செய்து, இலக்கியத்தில் பித்தலாட்டம் செய்யும் போலிக் கட்சிகளுக்கு சவுக்கடி கொடுப்பவர்! அநேக திரைப்படங்களுக்குப் பாடல்கள் பல எழுதி ரசிகர்களால் பாராட்டப் பெற்றவர்! அரசியல் அனுபவமிகுந்தவர்! எளிய தோற்றமுள்ள இயக்க வீரர்! இத்தனையும் அமைந்த இனிய தமிழ்க் கவிஞர்தான் திரு. கா. மு. ஷரீப் அவர்கள்.

தன் மேடைப் பேச்சாலும், எழுத்து வன்மையாலும் தமிழகத்திற்கு பல வருடங்களாக உழைத்து வருகிறார். விவாதத் திறமை மிக்கவர். ஒரு காலத்தில் திராவிட கோட்டையில் உலாவிய காரணத்தால் அதனுடைய அழிவுப்பாதையை நன்றாக அறிந்தவர், திராவிட கட்சியின் ஏமாற்று வித்தையை அறிந்து அதனின்றும் விலகி தமிழரசுக் கழகத்தில் வந்தவர்.

திராவிட நாடு பிரச்சினைகளில் கேள்விகள் எழும் போது விவாதத்திறமையோடு பதில் கொடுத்து எதிரிகளுக்கும் விளங்கும்படி செய்வதில் வல்லவர்.

'ஒளி', 'தமிழ் முழக்கம்' ஆகிய பத்திரிகைகள் நடத்தி தமிழகத்திற்கு தொண்டு செய்து தமிழரசுக் கழகத்தையும் வளர்த்தவர். "வான்புகழ் தமிழ் நாடே" போன்ற பல பாடல்களை எழுதி மக்கள் மத்தியிலே பரப்பி, மனதிலே பதியவைத்து தமிழ் ஆர்வத்தையூட்டியவர்.

பட முதலாளிகளின் நிர்ப்பந்தத்தினுல் டப்பா பாட்டுகள் எழுதினுலும், அதில் கருத்துச் செறிவுகள் துள்ளித்தெறிப்பதையும் தமிழ் உணர்ச்சி ஊற்றெடுத்துப் பாய்வதையும் நன்ருகக் காணலாம்.

1951-ல் நாகர்கோவிலில் நடந்த தமிழரசுக் கழக மாநாட்டில் கலந்து திரு-தமிழகப்போராட்டத்திற்கு வித்திட்டவர்களில் திரு. கா.மு. ஷரீபும் ஒருவர். தமிழகப் படத்தையும் திறந்துவைத்து அரிய சொற்பெருக்கு ஒன்றும் நிகழ்த்தினுர். 1954-ல் தெற்கெல்லைப் போராட்டத்தில் கலந்துகொள்ள தாயகத்திலிருந்து ஒரு தொண்டர் படை திரட்டிக்கொண்டு வந்தவர்.

திரு-தமிழகத்திற்குப் பல தடவைகள் வந்து சொற்பொழிவுகள் நடத்தி தாயகத்தையும் திரு-தமிழகத்தையும் இணைக்கப் பாடுபட்டார்.

பல அரிய புத்தகங்களை எழுதி வெளியிட்டார். சமீபத்தில் சென்னையில் வட எல்லைக் கிளர்ச்சி நடைபெற்ற போது, அடுத்தடுத்து இரு தடவைகள் அரசாங்கத்தின் தடையை மீறிச் சிறை சென்ருர். எங்கள் எல்லைகளை அடைந்தே தீருவோம் என்று போலீஸ் அதிகாரியிடமே சங்கநாதம் செய்தார். அப்போது அவர் உணர்ச்சியின் உருவமாகத் தோற்றமளித்தார்.

கழிந்த சில ஆண்டுகள் தமிழரசுக் கழகத்தின் பொதுச் செயலாளராகப் பணியாற்றினுர். தொடர்ந்து பல ஆண்டுகளாக அதன் காரியக்கமிட்டி அங்கத்தினராகவும் இருந்து வருகிருர்.

தமிழரசு மலர தன் ஆவியையும் கொடுக்க அஞ்சாத தமிழரசுக்கழகத்தவரில் முதன்மை பெற்றவர். அவருடைய ஆசையும் தமிழகத்தின் ஆசையும் நிறைவேற தமிழக மக்கள் அவருடன் தமிழரசு கழகத்தில் சேர்ந்து உழைக்க முன்வருவோம்! முன்னேறுவோம்.

வாழ்க கவிஞர் கா. மு. ஷரீப்!

வளருக அவரது பணி!

வருக தமிழரசு!



# உழைப்பால் உயர்ந்த 'உமா' அதிபர், ஜி. உமாபதி.



உலகத்தில் கற்பனைக்குஎட்டாத அளவுக்கு உயர்ந்தவர்களை நாம் பார்த்திருப்போம். அவர்கள் எல்லாம் ஒரு நாட்டின் தலை எழுத்தையே மாற்றியிருக்கிறார்கள். ஆனால்? அவர்களை இந்த சமூகம் வாழவைப்பதில்லையே!

ஆனால் நமது உமாபதி அவர்கள் உயர்ந்த விதம் வேறு! கடுமையான உழைப்பு! உழைப்பே உண்மை வாழ்வு என்ற உண்மை உணர்ந்தவர். தன் பள்ளிப்பருவத்திலேயே தன் தந்தையை இழந்தார். சிறிது காலத்திற்குப்பின் படிப்பிற்கு ஒரு முற்றுப்புள்ளி அடுத்தாற்போல் நம் தலைவர் ம. பொ. சி-யின் தொழில் ஆம்! அச்சுத்தொழில்தான். தொழிலில் உற்சாகத்துடன் உழைத்ததால் அச்சக உரிமையாளரின் நன்மதிப்பைப் பெற்றார். சம்பளம் சிறிது உயர்ந்துவிட்டது. அந்த வருவாயும் குடும்பத்திற்கு போதவில்லை; அச்சக உழைப்பைத் தவிர வீட்டிலும் உழைத்தார். நோட்டு புத்தகங்கள்

தயாரித்து விற்ருர். பிறரிடம் கையேந்தாமல் தானே உழைத்து உயரவேண்டும் என்ற ஊக்கமும், தன்னம்பிக்கையும்தான் அவர் முயற்சியை வெற்றிபெறச் செய்தது. தன் உடலைப்பற்றி கவலைப்படாமல் உழைத்து ஒரு அட்டைப் பெட்டிக் கடை வைத்து முன்னேறினர். ஆம்! உண்மை உழைப்பும், உறுதியும், உமாபதியை உயர்த்தியது. உழைக்காமல் உண்டு உறங்கும் சோம்பேறிக் கும்பல்களுக்கு திரு. உமாபதி ஒரு சவால் வீரர். உழைப்பால் உயர்ந்த உத்தமர்.

கடை வைத்து இரண்டு ஆண்டுகளுக்குள் திருமணம் நடந்தது. ஆரம்பத்தில் இருந்தே தேசவிடுதலைக்கு பங் கெடுத்துக்கொண்டார். அதனுல் பல தலைவர்களின் நட்பும் கிடைத்தது. அறிஞர்களின் அன்புக்குப் பாத்திரமாகி அறிவையும் வளர்த்துக்கொண்டார். இரண்டாண்டுகளுக்கு பின் அட்டைப்பெட்டிக்கடை, அச்சகமாய் உருவாகியது! அச்சகமாக உயர எப்படி உழைத்திருப்பார் என்பதை சிந்திக்கவேண்டும். அதே அச்சகம் இன்று தென் இந்தியாவிலேயே ஒரு சிறந்த அச்சகமாகவும் அட்டைப் பெட்டி தயாரிப்பதில் முன்னணி தொழிற்சாலையாகவும் விளங்குகிறது. சிறந்த மாதப்பத்திரிகை "உமா"வின் ஆசிரியராகவும் விளங்குகிருர்.

---

உழையும் உப்பக்கங் காண்பர்-உலைவின்றித்
தாழா (து)உ ஞற்றுபவர். —என்பது வள்ளுவர் வாக்கல்லவோ!

உமா அச்சகத்தின் அதிபர்! உமா பத்திரிகை ஆசிரியர்! சென்னை மாவட்ட தமிழரசுக் கழகத் தலைவர் இத்தனை பொறுப்புகளையும், இல்லற பொறுப்புடன் தாங்கி செயலாற்றுகிருர், திரு. உமாபதி. இவர் ஒரு நல்ல மேடைப் பேச்சாளர். இவர் பேச்சிலே பண்டைய தமிழ் வீரம் பீறிட்டெழும், நட்புக்கு மிகவும் நல்லவர். இவருடைய தோற்றம் சங்ககால இலக்கியத்தில் வரும் வீரர்களை

ஒத்திருக்கும். ஆனுல் உள்ளம்! தமிழ் பண்பிலே ஊறியது. 1951-ல் நடந்த தமிழரசுக்கழக மாநாட்டில் இரண்டு நாட்களிலும் கலந்து கொண்டார். தாயக மக்களோடு திரு. தமிழக மக்களேயும் தன் அன்புக்கயிற்ருல் பிணேத்து பேசினுர். 3–7–'55-ல் சென்னே மாநில தமிழரசுக் கழக மகாநாட்டிற்கு தலேமைதாங்கி வெற்றிகரமாக நடத்தினுர். சமீபத்தில் நடந்த திரு-தமிழக இணைப்பு விழாவிற்கு நாகர்கோவிலுக்கு வந்து, அழகாகவும், அன்பாகவும் பேசி நகரசபை திடலேயே வசீகரித்தார். உழைப்பால் உயர்ந்த உமாபதி அவர்கள் தமிழரசுக்கழகத்திற்கு கிடைத்திருப்பது நாம் செய்த பாக்கியமே. நமது கழக முன்னேற்றத்திற்காக அல்லும் பகலும் அயராது உழைக்கும் ஜி. உமாபதி அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து நமது இலட்சியத்தை நிறைவேற்றி சமதர்ம தமிழக குடியரசில் கொலுவீற்றிருக்கட்டும்.

வாழ்க உமாபதி! வளருக அவரது தொண்டு!!

---

# தென்தமிழ்க் காவலர்
# திரு. பி. எஸ். மணி.



தியாகிகளையும், அரசியல் ஞானிகளையும், கலைஞர்களையும், கவிமணிகளையும், கலைவாணர்களையும் பெற்றெடுத்த நாஞ்சில் தந்த நற்றமிழ்ச் செல்வம் திரு. பி. எஸ். மணி. நாட்டுப் பற்று மிகுந்தவர்; பொது நலப் பணியே அவர்கள் கடனெனக் கொண்டவர். 1942-ல் தீவிர அரசியல் வாதியாகத் திகழ்ந்து, தன் சொந்த வேலைகளையும் புறக்கணித்துப் போராட்டத்தில் இறங்கினார். 1937முதல் 1945 வரை காங்கிரஸ் அங்கத்தினராகவே இருந்து பணியாற்றினார். இவர் ஒரு தீவிரவாதி.

மலையாள சர்க்காரின் கொடுமைகளிலிருந்து திரு-தமிழக மக்கள் விடுதலை பெற 1945-ல் திருவிதாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் என்ற ஸ்தாபனத்திற்கு வித்திட்டு அது வளர அல்லும் பகலும் அயராது உழைத்தவர். ஆகவேதான் இன்று பி. எஸ். மணி என்ற பெயரைக் கேட்டதும் தி. த. நா. காங்கிரஸின் நினைவு ஓடி வருகிறது! 1945 டிசம்பர் 16-ம் தேதி அதன் முதற் கூட்டம் நடைபெற்றது. அதில் முக்கிய பொறுப்புகள் திரு. பி. எஸ். மணிக்கு கிடைத்தன. மலையாள வெறியர்களுக்கோர் மறலியாகத் திகழ்ந்தார். 1950-ல்

'குமரி எல்லை மாநாடு' நடத்துவதற்குக் காரணமாக இருந் ததுமட்டுமல்லாமல், அதன் விளம்பரச் செயலாளர்களில் ஒருவராக இருந்து செயல் புரிந்தார்.

தி. த. நா. காங்கிரஸ் நடத்திய போராட்டங்களில் கலந்து பெரும் பணிகள் புரிந்தார். 1954-ல் தி. த. நா. கா. நடத்திய இரண்டாவது போராட்டத்திற்குக் காரணம் திரு. பி. எஸ். மணிதான். போராட்டப் பாதையிலேயே ஒரு புரட்சியை ஏற்படுத்த, கோர்ட் மறியலுக்கு வழி வகுத் துக் கொடுத்தார். திரு-தமிழகத்திலே போராட்டம் நடந்து கொண்டிருக்கும்பொழுது தாய்த் தமிழகத்தில் சூறுவளிச் சுற்றுப்பிரயாணம் செய்து, அங்குள்ள தாய்த் தமிழ் மக் களைத் தட்டி எழுப்பினர். பத்திரிகை நிர்வாகிகளைப் பேட்டி கண்டு இங்குள்ள நிலைமைகளை எடுத்துரைத்தார். அதனுல் பல தலைவர்களும் கட்சிப் பாகுபாடின்றி திரு-தமிழகத் திற்கு விஜயம் செய்து வீர கர்ஜனை புரிந்தார்கள். தாய்த் தமிழகத்திலிருந்து திரும்பியதும் 'பட்டம்' சர்க்கார் பழி தீர்த்துக்கொண்டது. சிறையில் அடைக்கப்பட்டார் திரு. பி. எஸ். மணி. மணி என்றதும் கிலி அடைவர் மலையாள அதிகாரிகள்.

1942-ல் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டு அயராது உழைத்தார். அதன் பலன் சிறைத் தண்டனை பெற்ருர். 1949-ல் தி. த. நா. கா-வின் முதற் போராட்டத் திலே கலந்து சிறைத் தண்டனை அனுபவித்தார்.

1954-ல் சிறையில் அடைக்கப்பெற்று விடுதலை செய் யப்பட்டார். கிடைத்த நாலரைத் தாலுகாக்களுக்காக திரு. பி. எஸ், மணி மகிழ்ச்சி அடைந்தாலும், மீதியுள்ள நாலரைத் தாலுகாக்கள் கிடைக்கவில்லையே என்ற வருத்தம் அளவு கடந்திருக்கிறது. அவைகளை மீட்கும் வழிகளையே சிந்தித்துக் கொண்டிருக்கிருர்.

'தமிழரின் வாழ்வே தன் வாழ்வு', 'தமிழே தன் மூச்சு' என்று தன்னலம் கருதாது உழைக்கும் திரு. பி. எஸ்.

மணிக்கு தலைவர் ம. பொ. சி-யிடம் அளவு கடந்த அன்பு இருப்பதில் ஆச்சரியம் இல்லை. திரு. ம. பொ. சி-யை திரு-தமிழகத்திற்கு முதன்முதலாக அழைத்து இங்குள்ள நிலைமைகளை எடுத்துக் கூறி ஆக்க வேலைகளுக்காக அரும் பாடு பட்டவர் மணி ஒருவர்தான். ஆகவே, திரு. ம. பொ. சி-யும் தி. த. நா. காங்கிரஸிற்கு பெரும் ஆதரவு கொடுத்தார். 1954 ஜூன் மாதம் நாகர்கோவிலில் நடந்த தமிழரசுக் கழக மாநாட்டிற்குத் தலைவராய் இருந்து, பெரும் பணியாற்றி மாநாட்டை வெற்றிகரமாய் நடத்தினர். இன்னும் எத்தனையோ அரும்பெரும் தியாகங்களைச் செய்திருக்கும் திரு. பி. எஸ். மணி, தெற்கெல்லைப் பாதுகாப்பாளர் என்று தலைவர் ம. பொ. சி-யால் பாராட்டப்பெற்றவர்.

வாழ்க திரு. பி. எஸ். மணி! வளருக அவரது பணி!!



# புலவர் ந. சஞ்சீவி M. A.



இலக்கியம் எந்தப்பணியைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், இன்பம் தரவேண்டும் இதயத்திலே, இன்பம் ஊட்டாத எழுத்துக் குவியல், இலக்கியமாகிவிடாது ஆனால் எல்லாவித இலக்கியங்களும், எல்லோருடைய இதயங்களையும், எளிதில் கவர்வதில்லை. படித்தவர்களுக்குக்கூடப், பதம் பிரித்துப், பொருள் தெரிய முடியாத நூல்கள், பண்டிதர்களின் அறிவில் மட்டும் புகும் அளவோடு இருக்கின்றன. இன்று நமது இதயம் கவரும் இன்பக் காவியங்கள், பெரும்பாலும், படித்தவர் இதயங்களைத்தான் பரவசப்படுத்துகின்றன. இத்தகைய கருத்துக் குவியலான இலக்கியத்தை, எல்லோர் இதயத்திலும் எளிதான முறையிலே புரியும் அளவுக்கு, இனிதாகப் பேசும் திறம்பெற்ற இளைஞர் புலவர் திரு. ந. சஞ்சீவி அவர்கள்.

தமிழரசுக் கழக, மேடைப் பேச்சாளர்களின் குழுவிலே, ஒருவரான திரு. ந. சஞ்சீவி அவர்கள், தன் பேச்சுத் திறத்தால், எந்த மனிதனுடைய இதயத்திலும் இடம்

பெற்று விடுவார். திருச்சி மாவட்டத்தில், இவர் பெயர் தெரியாதவர்களே கிடையாது. இவரது தந்தையார் திரு, மு. நடேச முதலியார் அவர்கள் இவரது புகழ் கண்டு பெருமைப்படும் ஒரு மேதை— திருச்சி அர்ச். சூசையப்பர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுபவர்.

திரு. ந. சஞ்சீவி அவர்களின் கல்வித்திறன் தந்தையாரைக் கவர்ந்தது. தன்னைப்போல் தமிழ்ப்பேராசிரியராகத் தன் மகனும் விளங்கவேண்டும் என்று ஆவல் கொண்டார். அதிலும் வெற்றி கண்டார். திருச்சி அர்ச். சூசையப்பர் கல்லூரியிலும், உயர்நிலைப் பள்ளியிலும் பயின்ற பின் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியிலேயே படித்து M. A. பட்டமும் பெற்ற திரு. ந. சஞ்சீவி அவர்சள், இன்று காஞ்சீபுரம் பச்சையப்பர் கல்லூரியில தமிழ் விரிவுரையாளராக அமர்ந்து, தமிழ்ப்பணியே புரிந்து வருகிறார். படிக்கும் போது எந்தப் போட்டிகளிலும் முதற்பரிசைத் தட்டி எடுக்கத் தாவிவர ஆவல் கொள்பவர். 1954-ல் கம்பர் கழகத்தார் நடத்திய சென்னை மாநில மாணவர் பேச்சுப் போட்டியில் முதற் பரிசும், 1950-ல் B. O. L. (Hons) தேர்தலில் மாகாணத்தில் முதல் வகைத் தேர்வு பெற்றமைக்காக, அருட்டிரு ஜாண் லாசரஸ் தங்கப்பதக்கமும், நூற் பரிசும், ரங்கைய செட்டி புத்தகப் பரிசும் பெற்ற புலமை மிக்கவர். புலவர்—பேச்சாளர்—மட்டுமல்ல சிறந்த ஒரு எழுத்தாளருமாவர். இவரது எழுத்து வன்மையை, இவர் எழுதி வெளியிட்ட "தற்காலச் சான்றோர்கள்" "மருதிருவர்" "மானங்காத்த மருது பாண்டியர்" 'வேலூர்ப் புரட்சி" "சிலப்பதிகாரத்திலிருந்து' என்ற நூல்களில் காணலாம்.

2-7-1927 ல் தமிழ் மண்ணில் சேயாகப் பிறந்து 30 வயதே நிரம்பிய அழகிய இவ்வாலிபர் தன் அறிவுக் காலத்தில் ஆற்றிய அறிவுப்பண், தேசப்பணிகள், அனந்தம். அவற்றை எல்லாம் அள்ளிக் குறிக்கத் தனி இதழ் வேண்டும். கன்னியாகுமரி மாவட்டத்தில் தெற்கெல்லை

மீட்சிப்போரின் போது, போராட்டத்தை ஊக்குவிக்க, ஒரு சூறுவளிப் பிரயாணமே நடத்தினர். பேசினர். விவாத விளக்கத் திறமையோடும், சரளமான பேச்சோடும் கவர்ச்சிகரமான கருத்தோடும் மக்களைக்கவரும் மாண்பு பெற்றவர். தமிழ் நாட்டில் நடைபெற்ற கணக்கற்ற இலக்கிய மாநாடுகளில் பங்குகொண்டு, சிறப்புற இலக்கிய சொற்பொழிவாற்றியவர். 1954 ல் நாகர்கோவில் தமிழரசுக் கழக மாநாட்டிலே இலக்கிய விழாவுக்குத் தலைமை தாங்கி இலக்கியச் செல்வத்தை எல்லோர்க்கும் வாரி இறைத்தார். வயதில் குறைந்த இவருக்கு அறிவு முதிர்ந்தது எனக் கூருதார் மாநாட்டுப் பந்தலில் குழுமியிருந்த மக்களில் யாருமே இல்லை. தமிழன்னையை தமிழ் இலக்கிய மலர்கள் சொரிந்து வணங்கும் தனயன் திரு. ந. சஞ்சீவி அவர்கள் எனக் கூறினல் முற்றிலும் பொருந்தும். இலக்கியத்தோடு அரசியலையும் அலசிப்பார்த்து அறிவு கூறும் இப்புலவர் வாழ்க பல்லாண்டு என வாழ்த்த தமிழ்மக்கள் எல்லோரும் கடமைப்பட்டவர்கள்.

தமிழ் நாட்டின் அறிவுப்புதையல்

புலவர் ந. சஞ்சீவி அவர்கள் வாழ்க! வளர்க!!

# சிங்கத் தமிழன்- சின்ன அண்ணாமலை



1942 தந்த தேசீய வீரரே திரு. சின்ன அண்ணாமலை: இந்திய விடுதலை இயக்கத்தில் அரும்பாடுபட்ட தியாகிகளில் திரு. சின்ன அண்ணாமலையும் ஒருவர்.

தமிழ் ஆர்வத்தால் தமிழ்ப் பண்ணை வைத்து தமிழ் நாட்டில் புதிய விதத்தில் புத்தகங்களை வெளியிட்டவர். தமிழன் என்ற சொல் மாறி திராவிடர் என்ற குரல் கேட்டதும், திராவிட எதிர்ப்பு முன்னணி அமைத்து தமிழர்களின் பெருமையை எடுத்துக் கூறி, 'திராவிடம் என்பது தமிழரைக் கொல்லும் நஞ்சு!' என்று பறை சாற்றினர். அதனல் பலவித துன்பங்களுக்கும் எதிர்ப்புகளுக்கும் ஆளானர்.

நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளையின் கவிதைகளுக்குச் சங்கநாதமாக விளங்கியவர்.

அஹிம்ஸாமூர்த்தி அண்ணல் காந்திஜியின் 'ஹரிஜன்' பத்திரிகையின் தமிழ் மொழிபெயர்ப்பைப் பல்லாண்டுக



ளாக நடத்தி தமிழ் மொழிக்கும் தேச விடுதலைக்கும் சேவை செய்தார். வாராவாரம் 'வெள்ளி மணி' கொண்டுவந்தவர்.

தலைவர் திரு. ம. பொ. சி-யின் கொள்கைகளைக் கடைப் பிடித்து, கடமையுடன் செயலாற்றுபவர். தலைவர் திரு. ம. பொ. சி-யின் அன்புக்கு உரியவர். 'தமிழரசுக் கழகத்தின் பிரச்சார பீரங்கி' என்று தமிழக மக்களால் போற்றப்படுகிறார் சிங்கத் தமிழன் சின்ன அண்ணாமலை.

தமிழரசுக் கழகத்தின் மத்திய செயற் கமிட்டி உறுப் பினராகப் பொறுப்புணர்ந்து செயல் புரிகிறார்.

'சங்கப் பலகை' மூலம் தமிழ், தமிழ் நாடு வளர்ந் தோங்கப் பணி புரிந்தார். சென்னையில் 1955-ல் நடைபெற்ற சென்னை மாவட்ட தமிழரசுக் கழக அரசியல் மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராகப் பொறுப்பேற்று மாநாட் டைச் சிறப்பாக நடத்தினார் திரு. சின்ன அண்ணாமலை.

திரு. சின்ன அண்ணாமலையுடைய ஒவ்வொரு எழுத்தி லும் ஒவ்வொரு பேச்சிலும் வீரத்தையும், விவரிக்கமுடியாத நகைச்சுவையையும் காணலாம். தமிழரசுக் கழகம் என்ற ஆல மரத்தில் விழுது போன்ற திரு. சின்ன அண்ணாமலை தமிழுக்குப் பணி புரியவே பிறந்தவர்.

வாழ்க பல்லாண்டு!

# ஔவை T. K. சண்முகம்.



வெளிச்சம் தரும் விளக்கின் முன்னே நின்றுகொண்டு இது தான் விளக்கு என்று தன் நண்பனிடம் கூறினனும் ஒருவன். அதுபோன்று அன்புக் கலைஞர் திரு. T. K. சண்முகம் அவர்களை அறிமுகப்படுத்த நாமும் முன் வந்திருக்கிறோம். தலைப்பைப் பார்த்ததும் அதிக அறிமுகத்தால் தெரிந்தவர்தானே என்று பக்கத்தைத் திருப்பாமல் வாசகர்கள் படிப்பார்கள் என்பதும் எமக்குத் தெரியும்.

கடந்த 25 ஆண்டுகளாக நடிப்புலகில் காலூன்றி தன் திறமையால் பொதுமக்கள் இதயத்தில் இடம் பெற்று நாடகவானையே சீர்திருத்தி நாட்டின் நலத்திற்கு, நாடகம் மிகவும் இன்றியமையாத கலை என்ற தத்துவத்தை நிலை நாட்டிய பெருமை நமது திரு. T. K. சண்முகம் அவர்களையே சாரும். நாடகத்தின் மூலம் நாட்டுக்கேற்ற நற்பணியை செய்து காட்டி வாழ்க்கையோடு நாடகத்தை ஒட்டி வைத்தவர் இவர்தான் என்றால் அது மிகையாகாது. நாடகக் குழுவை சிரமத்தைப்பாரர்மல், திறம்பட நடத்தி, நடிக மணிகளை கதாசிரியர்களை முன்னேற்றி மக்கள் மத்தியிலே உலவவிட்ட பெருமையும் திரு. டி. கே. எஸ். அவர்களுக்குண்டு. நாடகக்கலையின் மீது தான் கொண்ட பக்தியால்

அதன் முழு உருவாம் தமிழ்மொழி மீது பற்றுக்கொண்டவர் தமிழே தன் உயிரெனப்போற்றும் தகைமையாளர், தமிழ் தந்த கலைகளை கண்ணெனமதிப்பவர். அதன் இலக்கியத்தை படித்து அதன் வழி நடக்கத்திறம்படைத்த ஒரு நல்ல கலைஞர் யார் என்று கேள்வி எழுந்தால் ஆராயுமுன் கண் முன்னே தோன்றுபவர் திரு. டி. கே. சண்முகம் அவர்கள் தான். சேரநன்நாட்டிலே தோன்றி பாண்டியன் பூமியில் கலை வித்தூன்றி, சோழ மண்ணிலே சோர்விலாதுழைத்து சுடர் எனத்துடங்கி "முத்தமிழ் கலா வித்வ ரத்னம்" என்ற பட்டத்தையும் பெற்றவர், 43 வயதாகியும் 30 வயதே மதிக்கத் தகுந்த அழகிய வாலிபனாகிய திரு. டி. கே. எஸ், 60 க்கும் மேற்பட்ட ஔவை பாட்டியாக நடித்து தன் நிகரில்லாப்புகழுடன் ஔவை என்ற பட்டத்தையும் பெற்றவர். குறிப்பாகச்சொல்லப்போனால் இன்றைய நடிகர் உலகின் பேராசிரியர் என்று பெருமையுடன் சொல்லக்கூடிய தகுதி வாய்ந்தவர். இதை யாருமே மறுக்கமுடியாது. தன் வாழ்நாளை நடிப்புக்கலைக்காக அர்ப்பணித்து நாடக உலகில் அரிய பல புரட்சிகளைச்செய்து புதுயுக நடிகர் பரம்பரையே தோற்றுவித்துத் தக்க பாதுகாப்பும் அளித்துவரும் கலை யுலக சிற்பி. பொது உடமைப் பாரதியின் பாடல்களை நாட்டின் பொதுச் சொத்தாக்க வாதாடி வெற்றிகண்ட வள்ளல். குரு பக்தியில் சிறந்தவர். இன்று நடிகர்களின் பூரண ஒத்துழைப்பையும் பெற்று, குறை கண்ட இடத்தில் முறை செய்து திருத்தி, அறிஞர் உலகில் மட்டுமல்ல, அரசியலிலும் தன் குரலை அஞ்சாது எழுப்பும் ஆற்றல்பெற்ற ஔவையாக விளங்குபவர். எளிமையே உள்ளமாகவும் கலையே வடிவமாகவும், தமிழே மூச்சாகவும், பரிமளிக்கும் முத்தமிழ் கலா வித்வரத்னம். அரசியலார் தங்கள் ஐந் தாண்டுத் திட்டத்திற்கு, நாடகத்தைப் பயன்படுத்தும் அளவுக்கு, நாடகக்கலையை, உயர்நிலைக்கு உயர்த்திய கலைக் காவலன். தமிழரசுக்கழகமே, தமிழை-தமிழரை-வளர்க்கும் தாபனம், எனத்தேர்ந்தெடுத்த தமிழன். தலைவர் ம. பொ. சி-யின் மனத்திரையில், மாறு இடம்பெற்ற மாணிக்கம். தலைவருக்கு நிதியுதவத் தலைமை தாங்கி, வெற்றி கண்ட

வீரத்தொண்டர். திரு. டி. கே. சண்முகம் அவர்கள்தான், தமிழரசுக்கழக ஆரம்பகால முதலே கழகத்தில் தொடர் புள்ள இக்கலைஞர், ஆண்டுகள் பலவாக, நிர்வாகக்குழுவில் பொருளாளர் பொறுப்பேற்று தொண்டாற்றி வருகிறார். சென்னையில் நடந்த தமிழரசுக்கழக இரண்டாவது மாநில மாநாட்டில் வரவேற்புக் குழுத்தலைவராகப் பொறுப்பேற்று, சிரிய முறையில் நடத்தினார், நாகர்கோவிலில் நடைபெற்ற தமிழ்நாடு எழுத்தாளர் மாநாடு வெற்றிபெற செய்ததில், திரு டி. கே. எஸ். அவர்களுக்குப் பெரும் பங்குண்டு. திருவிதாங்கூர் தமிழர் இயக்க வளர்ச்சிக்காக, பெரிதும் பயன்பட்டவர்களில், முதன்மை வகிக்கக்கூடியவர் திரு டி. கே. சண்முகம் அவர்கள்தான். அவ்வியக்கம் வளர ஆயிரக்கணக்கில் அள்ளியுதவியவர் கன்னியாகுமரி மா வட்டம் இக்கலைஞருக்குக் கடமைப்பட்டது. தமிழுக்கும், தமிழ்நாட்டுக்கும், கலைக்கும், கலைஞர்களுக்கும், அரசியல் நேர்மையாளருக்கும் துணை நின்று, அவைகளின் வளர்ச்சி யிலே கண்ணோட்டம் செலுத்தி நிற்கும் செம்மல் டி. கே சண்முகம் அவர்களின் புகழ் தமிழ் தரணியெங்கும் மேலும். பரவி, மணம்பெற்று, செயல் சக்தியுடன் மிளிரவேண்டு மென்று வாழ்த்துகிறோம்.

வாழ்க பல்லாண்டு!

---

# கடமைக் காவலர்
# புதுவை, சிவ. கண்ணப்பர்.



சிவபெருமானின் சண் களுக்காக, தன் கண்ணையே தானம் செய்தார் திருக் கண்ணப்ப நாயனுர்.

பிரஞ்சுத் தமிழகத்திற் காகத் தன்னையே தானம் செய்ய முன்வந்துள்ள தன் மானத் தமிழரே திரு. சிவ. கண்ணப்பர் ஆவர். தெற்கு எல்லைக்கு திரு. மணி, வடக்கு எல்லைக்கு திரு. விநயகம் போல் பிரஞ்சுத் தமிழகத்திற்கு திரு. கண் ணப்பர் என்று நமது மதிப் பிற்குரிய ம. பொ. சி. அவர்களால் பாராட்டப் பெற்றவர்.

இவர் 7—3—'21-ல் மதுரையம்பதியில் பிறந்தார். தந்தை பெயர் சிவகுருநாதன்; அன்னை பெயர் ஆதிலக்குமி; மனைவி பெயர் ரமணி அம்மாள்; உடன் பிறந்த அண்ணன் பெயர் முனியப்பன்.

இவரது பெரும்பாலான பள்ளி வாழ்வு, அன்னிய மொழி கற்பதிலேயே கழிந்தது. தமிழ், பிரஞ்சு, ஆங்கிலம், இலத்தீன் ஆகிய நான்கு மொழி பயின்ற நற்றமிழர் ஆவர். இவரைத் தமிழ் பக்தனுக மாற்றியது நமது திரு. வி. க-வின் 'இலங்கைச் செலவு' என்ற கட்டுரையே. இவர் பெரிதும் விரும்பிய விளையாட்டு 'கால் பந்தாட்டம்'. ஆனுல் இவரை இளமையில் பற்றிய உடல் நோய் கல்லூரிப் படிப்பை முற் றுப்பெறச் செய்யவொட்டாமல் தடுத்ததோடு கால் பந் தாட்டத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்தது.

இவர் 15 ஆண்டுகளாக ஆசிரியப் பணியாற்றி வருகிறார். பிரஞ்சுக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிய போது அக்கல்லூரியில் தமிழைக் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்று அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகளனைத்தும் ஒரு சிலரின் சூழ்ச்சியால் வீணாயின.

'தமிழ் முரசு' பத்திரிகை இவரைத் தமிழரசுத் தொண்டனாக மாற்றியது. எட்டு ஆண்டுகளாகத் தமிழரசுக் கழகக் கொள்கைகளைப் புதுவையில் பரப்பி வருகிறார்.

சென்னையில் நடைபெற்ற தமிழரசுக் கழக முதல் மாநில மாநாட்டில் புதுவைப் பிரதிநிதியாகக் கலந்து பிரஞ்சுத் தமிழக விடுதலைப் போராட்டத்தைப் பற்றி வீரச் சொற்பொழிவு புரிந்தார். 'செங்கோ'லிலும், 'ஆனந்தபோதினி'யிலும் இலக்கியக் கட்டுரைகளும், மொழிபெயர்ப்புக் கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். 'ஜாதிப் பற்று' என்ற நவீன நூலும், 'மாணவர் இலக்கணம்' என்ற இலக்கண நூலும் வெளியிட்டிருக்கிறார். நாடகம் எழுதும் பழக்கமும் இவருக்கு உண்டு.

தமிழ் ஆட்சி மொழியாக வேண்டுமென்பதும், தமிழ்ப் பட்டதாரிகள் கலெக்டர்களாகவும், இஞ்சினீயர்களாகவும் அமர்த்தப்படவேண்டுமென்பதும் இவரது நெடு நாளைய ஆசை. இந்த ஆசைக் கனவு நனவாகி தமிழகம் தலை நிமிரத் தலைவர் ம. பொ. சி-யின் ஆணைகளைப் பின்பற்றுவோம்.

---

# இலட்சிய கவிஞர்
# கு. மா. பாலசுப்பிரமணியம்.



கலையும் காவியமும் களி நடம்புரியும், செந்நெல் குலைகள் செந்தமிழ் இசைக்கும் தஞ்சை ஜில்லாவில் திருவாரூரை அடுத்துள்ள வேளுக்குடியில் தமிழகம், தமிழ் மக்கள், தமிழ் மொழி செய்த அருந்தவப் பயனால் பிறந்தார் கவிஞர் கு. மா. பா!

அன்று— திண்ணைப் பள்ளியில் மூன்றும் வகுப்பு வரையில் படிப்பதற்குத்தான் பொருளாதாரம் வழிவிட்டது கு. மா பாவிற்கு! ஆனால், பிறகு பல தொழில் துறைகளில் வேலை செய்து வயிற்றை வளத்ததற்கிடையே தமிழ், அறிவையும் சொந்த முயற்சியால் வளர்த்துக்கொண்டார்!

அந்த முயற்சியின் பிரதிபலிப்பு திரு. கு. மா. பா. வை பதினேழாவது வயதிலேயே ஒரு எழுத்தாளனாக மலரச் செய்தது.

தமிழ், தமிழ்நாடு, தமிழ் ஆட்சி என்ற உரிமைக்குரலை எழுப்பும் கட்சியிலே போய்ச் சேர்ந்துகொள்வதென்பது இளமையிலிருந்தே இயற்கை குணமாக அமைந்திருந்தது திரு. கு. மா. பாவிடம்.

அக்காலை "தமிழ்நாடு தமிழருக்கே" என்ற முழக்கத்துடன் தன்மான இயக்கத்தை வளர்த்துக் கொண்டிருந்தார்.

திரு. ஈ. வே. ரா தமிழ்ப்பற்று, தமிழ் இன உணர்ச்சி தமிழக எழுச்சி திரு. கு. மா. பா. வை அக்கட்சியில் இணைய வைத்தது தன்மான இயக்கத்தின் கோட்டை என்று கூறத்தக்க விதத்திலே தஞ்சை மாவட்டத்தில் குறிப்பாக திருவாரூர், நாகப்பட்டினம் பகுதிகளில்—அந்தக்கட்சியில் வளர்த்த பெருமையில் பெரும்பங்குண்டு திரு. கு. மா. பா விற்கு! அப்பொழுது திரு. கவி. கா. மு. ஷெரீப், வெளவா லடி ஷம்சுதீன் ஆகியோர் திரு. கு. மா. பா வோடு பணி யாற்றியவர்கள் ஆவர்.

தமிழன், தமிழ்நாடு என்ற குரல் மறைந்து திராவிடன் திராவிடநாடு என்ற தலைப்பு பாறத் தொடங்கியபோது திரு. கு. மா. பா. அந்தக்கட்சியிலிருந்து ஒதுங்கிக் கொண் டார்!

பின்னர்—

"உடல் மண்ணுக்கு! உயிர் தமிழுக்கு!" எனும் கொள்கையுடன் திரு. சி. பா, ஆதித்தன் பார்—அட்—லா. ஆரம்பித்த தமிழ் ராஜ்யக்கட்சியிலே போய் இணைந்தார். அந்தக் கட்சிக்காக முதலில் மதுரையிலும், பிறகு சென்னை யிலும் நடத்தப்பெற்ற "தமிழன்" வாரப்பத்திரிகையின் துணையாசிரியனாக பணியாற்றினார். சில ஆண்டுகளில் அந்தப் பத்திரிகையும் ஓய்ந்தது; கட்சியும் மாய்ந்தது!

---

ஆயன் விடுதலையைப் பெற்றெடுப்பதற்காகத் தேசம் முழுவதும் வேதனைப்பட்ட அந்த நாளில் "சுதந்திர இந்தி யாவில் மொழிவழி மாகாண சுயாட்சியும், சுய நிர்ணய உரிமையும் உண்டு" என்ற காந்தியடிகளின் வாக்கு திரு. கு. மா. பாவின் கருத்தைக் கவர்ந்தது. சிறிது காலம் காங்கிரஸ் எனும் பெருங்கடலில் சிறு துளியாகக் கரைந் துறைந்தார். அந்த இடைக்காலத்திலும் கோவை 'வீரசக்தி' "கொளும்பு வீரகேசரி" முதலிய பத்திரிகைகளிலே துணை யாசிரியராகப் பணியாற்றிய அவர் எழுத்துக்களில் தமிழ் இன உணர்ச்சியே தலைதூக்கி நின்றது.

தேசம் விடுதலைப்படைந்தபின்னர்" மொழிவழி மாகாண சுயாட்சி" என்பதையே தேசீய வாதிகள் மறந்து விட்டதையும் ஆங்கில ஏகாதிபத்தியத்தியத்துக்குப் பதில் வட இந்திய ஏகாதிபத்தியத்தையே நிலைநாட்ட ஆதிக்கவாதிகள் முனைந்ததையும் கண்டு ஏமாற்றம் அடைந்தார். அந்த சமயத்தில்—தேசீய வட்டாரத்திற்குள்ளிருந்தே, ஒரு எதிர்க் குரல் முழங்கியது. தமிழன்! தமிழ்நாடு! தமிழ் அரசு! அவை வெறும் சொற்களாக அல்ல, சுவையான தேன் துளிகளாக இன்பத்தைத தெளித்தன திரு. கு. மா. பாவின் இதயத்திலே!

செந்தமிழ் செல்வர் சிவஞானத்தின் குரல் ஒலித்த இசைநோக்கி ஓடி வந்தார் எட்டு ஆண்டுகளாக தமிழரசு கழகம் எனும் மாவிருட்சத்தின் கொம்புகளில் ஒன்றாக விளங்கி வருகிறார். அன்னாரின் இலட்சிய கனவு, தமிழ்நாடு தமிழ் அரசு தமிழ்மொழி உலகில் சிறந்து விளங்கவேண்டும் என்பதே ஆகும்!

வாழ்க கு. மா. பாவின் இலட்சியம்!

---

# செயல் வீரர் நாராயணசாமி தியாகக்கொடி சரோஜினி.



அகில இந்திய காங்கிரஸில் காந்திஜியின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அரிய தொண்டாற்றிய இவ் வீரத்தம்பதிகள் தமிழ்நாடு தந்த சென்னை செல்வங்கள். பிறந்த மண்ணைப் பேணிப்போற்றித் தன் மனைவியையும், உடன் பிறந்த தம்பி பகவத்சிங்கையையும் தியாகத்தீயிலே முக்குளித்து வரப்பணித்த மூதறிவு பெற்ற திரு. நாராயண

சுவாமி அவர்கள் முத்தமிழ் அறிவிலும் உயர்ந்தவர். சிறந்த ஒரு சிந்தனையாளர் மட்டுமல்ல தொழில் பிரமுகருமாவார். காந்திஜியின் சீடராக காங்கிரஸ் பாதையிலே நடந்த இத் தம்பதிகள் அப்பாதையிலே முள் புதரைக் கண்டார்கள். நல்லவர்களால் நடக்கமுடியாத அந்தப்புதரை நீக்கவாதம் புரிந்தார்கள். புதர்புதராய்த்தான் இருக்கும். புதுமையடையாது, என்ற முடிவு தெரிந்தார்கள். இருகரம் கூப்பி இறுதி வணக்கத்தைக் கூறித் திரும்பினார்கள். அவர்கள் திரும்பிய பாதை காடு முரடற்றது. கருத்துக்கு ஒத்தது. அதுதான் தமிழரசுக் கழகம் என்ற இலட்சியப் பாதை. தமிழரசுக்கழகம் காங்கிரஸில் இணைந்திருந்துகொண்டே தமிழகப்பணியாற்றி வந்தது மாற்றார் இழிவுரைகளைத் தாங்கிக் கொண்டே தன் செயலைத் தொடர்ந்தது. ஆயினும் இத்தம்பதிகள் தமிழரசுக்கழகத்திலேயே பற்றுக்கொண்டுழைத்தார்கள், காங்கிரஸ் மேலிடத்தார் தம் கடமையை மறந்த காரணத்தால், கருத்து வேற்றுமை கொண்டு கழகம் பிரிந்தது. உண்மையில் அன்று உவகை கொண்டவர்கள் திரு. நாராயணசாமி, சரோஜினி தம்பதிகளே. திருமதி. சரோஜினி அம்மையார் வாழ்வில் எத்துறையிலும் ஒரு பெண் தன் கணவனோடு ஒத்துவாழ முடியும், அப்படித்தான் வாழவேண்டும் என்பதைத் தன் வாழ்க்கை மூலம் நிரூபித்து விட்டார்கள். சத்தியாக்கிரகத்திலும் சதிபதிகள் மறியலிலும் கணவன் மனைவி சிறையிலும் பிரியாத பதிபத்தினி என்ற புகழ்பெற்றவர்கள். தங்களைமட்டுமா தாயகத்திற்கு தந்தார்கள்? தங்கள் இளவல் பகவத்சிங் என்ற வாலிபர். அவரையும் தமிழரசுக்கழக வீரனாக்கிவிட்டார்கள். அண்ணாவும் அண்ணியும் கூறும் அறிவுரையை அப்படியே கேட்டு அருந்தொண்டாற்றி வருகிறார்தோழர் பகவத்சிங் அவர்கள்.

1954-ல் நடைபெற்றது தெற்கெல்லைப் போராட்டம். மலையாள மந்திரி, திரு. பட்டம்தாணுபிள்ளை அவர்களின் போலீஸ் அட்டூழியம் மலிந்துநின்றது. அரசியல் பேசுவோர் அத்தனைபேர்களுடைய வாய்களும் அடைத்துப் போயின, அமைதியான முறையிலே அறப்போர்புரியும் தொண்டர்கள்

எலும்பொடிய அடித்து வீழ்த்தப்பட்டனர். ஏகாதிபத்திய எரிமலை குமுறிநின்றது. அதிகாரவெறி தாண்டவமாடிற்று. மக்கள் தலைவர்களும் அவமதிக்கப்பட்டனர். அந்தக்கொடிய சூழ்நிலையில், தமிழகத்திலிருந்து கவிஞர் கா. மு. ஷெரீப் அவர்கள் தலைமையில் வந்த போராட்டக்குழுவில், தடந் தோள் பூரிக்க வந்தவர் திரு பகவத்சிங் அவர்கள்.

அவ்வாண்டு சென்னையில் நடந்த தமிழரசுக் கழக மாநாட்டில் திருமதி சரோஜனி அம்மையார், தேசீயக்கொடி ஏற்றி சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார்கள். வடக் கெல்லை மீட்சிக்காக சென்னை சட்டசபை தமிழரசுக் கழகத்தாரால் முற்றுகை இடப்பட்டது, திரு நாராயண சாமியும், தம்பி பகவத்சிங்கும் மறியல் வீரராகச் சிறை புகுந்தனர். கைக்குழந்தை கையிலே இருந்து சிரிக்க, கழகப் பெண்தொண்டராக திருமதி சரோஜினிஅவர்கள் களத்திலே குதித்தார்கள். களவீரர் கண்கள் யாவும் மழலை கூறும் அப் பிள்ளை மீதிருந்தது மறியலில். ஓர் அமைதி போலீஸார் வந்தனர், கூட்டத்தைக் கலைத்தனர். குழந்தையுடன் திருமதி சரோஜினி அம்மையாரையும் கைது செய்தனர். சிறைக் கழைத்துச் சென்றார்கள். தன்னுடன் மனைவி, சகோதரனை யும் வருங்கால வாரிசு இளங்குழந்தையையும் நாட்டுக்கு உழைக்கும் நல்ல வீரராக பழக்கியுதவிய பெருமை திரு, நாராயணசாமி அவர்களுக்கே உரியது. மகத்தான இக் குடும்பம் தலைவர் மா. பொ. சி-யின்பால் கொண்ட மதிப்பும் அன்பும் அளவிட முடியாதன. தமிழே இவர்களது மூச்சு! தமிழ்நாடே இவர்களது பேச்சு.

**வாழ்க இத்தியாகக் குடும்பம்!**

---

# கலைஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி.



கும்பகோணம் தந்த வீரர், தமிழகத்தின் உரிமைக்காக போராடும் உத்தமர், தமிழரசுக் கழக கலைஞர்களிலே ஒருவர், தியாக சீலர் இத்தனையும் அமைந்த ஒரு பண்பட்ட மனிதரே திரு கு. சா. கிருஷ்ணமூர்த்தி. கலை ஆர்வத்தால் இளமையிலே நாடக கம்பெனியில் சேர்ந்து 1925 முதல் 1935 வரையுள்ள நாடக வாழ்க்கையில் இலங்கை, மலேயா, பர்மா, தமிழ்நாடு, கேரளம் முதலிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்தார். இளமையிலே தமிழ் ஆர்வமிருந்தவர். தமிழகத்திற்காக உழைக்க முற்பட்டவர்.

1938 ல் திரு என். ஆர். பெத்தபெருமாள் அவர்களுடன் சேர்ந்து புதுக்கோட்டையில் தமிழிசை மாநாடு கூட்டி வெற்றிகரமாக நடத்தினர். தமிழரசுக் கழகத்தின் ஆரம்பத்திற்கு முன்பே இவருக்கு தமிழரசுக்கழக லட்சியத்தில் அசைக்கமுடியாத ஆர்வம் உண்டு. ஆகவே தன் எண்ணத்தை நிறைவேற்றக்கூடிய தமிழரசுக் கழகம்

ஆரம்பமானதும், தாயைக்கண்ட சேய் போல் கழகத்தின் அணைப்பிலே ஒட்டிக்கொண்டார். "தமிழரசு" "தமிழ்முரசு" என்ற தலைப்புகளில் பல பாடல்களை இயற்றி வித்வான் களால் இசையரங்குகளில் ஒலிக்கச்செய்தார். முத்தமிழ் கலா வித்வரெத்னங்கள்— திரு டி. கே. எஸ். சகோதரர் களால் நடத்தப்படும் "அந்தமான் கைதி" என்ற புகழ் பெற்ற நாடகத்தை உருவாக்கி பரிசு பெற்றவர்.

திரு. கு. சா. கி. அவர்கள் தமிழரசுக்கழக ஆரம்பத்தி லேயே செயற்குழு உறுப்பினரானார். புதுக்கோட்டையில் இருக்கும்பொழுது புதுக்கோட்டை கிளைக் கழகத்தலைவராக வும், சென்னைக்கு வந்தபின் மைலாப்பூர் கிளைக் கழகத் தலைவராகவும் கடந்த இரண்டாண்டுகளாக திருவட்டீஸ் வரன் பேட்டை கிளைகழகத் தலைவராகவும் இருந்து பணி செய்து வருகிறார்.

தமிழரசுக்கழக உரிமைப் போராட்டங்கள் முழுவதி லும் பெரும்பங்கு கொண்டிருக்கிறார். 1948 ல் சென்னையில் நடந்த இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் திரு. கொ. மொ. ஜனார்த்தனம் தலைமையில் தொண்டர்களுடன் போலீஸ் காவலை மீறி சட்டசபைக்குள் புகுந்து கல்லூரிகளில் கட்டாய இந்தி முறையை, கல்விமந்திரி திரு. அவனாசிலிங்கம் அவர்களை வாபஸ் வாங்க வைத்துவிட்டு திரும்பினார்கள்.

தேவிகுளம், பீர்மேடு போராட்டத்தில் 1956 ஜனுவரி 18-ம் தேதி 37 தொண்டர்களுடன் ஐந்துமாத கர்ப்பிணி யான தன் மனைவி, அசோகன் (3 வயது) வீரபாண்டியன் (7 வயது) என்ற தன் குழந்தைகள் உட்பட சென்னை மவுண்ட்ரோடு தபால் நிலையத்தின் முன் மறியல் நடத்தினார்.

23—1—'56-ல் திரு கு. சா. கி தலைமையிலே, 33 வீரர்களுடன் (கு. சா. கி யின் மனைவிமக்கள் உள்பட) சட்டசபை முன்பு மறியல் செய்து போலீஸ் பாதுகாப்பை யும் மீறி சட்டசபைக்குள் சென்று கைது செய்யப்பட்டார்

அன்னை கஸ்தூரிபாயின் வழி நிற்கும் இவரது மனைவி திருமதி சகுந்தலா அவர்களின் தியாகத்தையும், கண்ணகி வழிவந்த அன்னாரின் வீரத்தையும் நினைக்கும்போது நம் நெஞ்சமும் வீரத்தால் விம்முகிறது, உரிமைக்கு போராட உள்ளம் உந்துகிறது.

வடக்கெல்லை போராட்டத்தில் அக்டோபர் 26-ம் தேதி 29 தொண்டர்களுக்குத் தலைமை தாங்கி சட்டசபை முன்பு மறியல் செய்து கைது செய்யப்பட்டார்.

தமிழராகப் பிறந்தவர்கள் எந்தத்துறையில் இருந்தாலும் தன் உரிமைக்காக போராடியே தீரவேண்டும். அதற்கு தலைசிறந்த ஸ்தாபனம் தமிழரசுக்கழகம்தான் என்ற ஒரே கொள்கையில் நமது ஒப்பற்றத்தலைவர் ம. பொ. சியின் ஆணைப்படி அயராது உழைத்து வருகிறார் திரு. கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

1935 ல் இருந்து இன்று வரையும் தமிழர்கள் உயர்வுக்காகவும், தமிழரசுக்கழக வளர்ச்சிக்காகவும் பல பாடல்களை எழுதியுள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாக தலைவர் ம. பொ. சி-யின் 50 வது ஆண்டு நிறைவு விழாக்குழுவின் செயலாளராக இருந்து விழா வெற்றிபெற அரும்பாடு பட்டார். வெற்றிகண்டு அகமகிழ்ந்தார் தன் குடும்பத்தையே உரிமைப் போராட்டத்தில் இறக்கி தமிழகம் வாழ வழி வகுக்கும் தியாக கலைஞர். திரு கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் உழைப்பு, தமிழரசு கரண மிகவும் தேவை. வாழ்க திரு கு. சா. கி.

வாழ்க அவர் குடும்பம்! வளருக அவர்கள் பணி!!

---

# இ. எஸ். தியாகராஜன்.



இருட்டறையில் இருந்துகொண்டு நாட்டின் நிலையறியாமல் நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கும் நலிந்த பக்களைத் தட்டி எழுப்பி உரிமை, கடமை நிலைமைகளை விளக்கிக்கூறி வீரர் களாக்க இளஞ் சிங்கங்கள் தான் தேவைப் படுவார்கள். நம் தமிழ் நாடு தாழ்வுற்று தமிழ்மக்கள் பிளவுற்று மாற்றுமொழி ஆட்சியாளர்களின் ஆதிக்கத்திலே அவதியுற்று அல்லல்பட்டபோது சிதறிய தமிழ் பகுதிகளை ஒன்று சேர்த்து, அகண்ட தமிழகம் உருவாக்க, திட்டம் தீட்டி, செயலில் இறங்கிய தலைவர் ம. பொ. சி. அவர்களைப் பின்பற்றி போர்க்களத்திலே குதித்து வெற்றிமாலை சூடிய இளைஞர்கள் பலர், பலர், பலர்.

அவ்விளைஞர் கூட்டத்திலே நாயகமாய் விளங்கிய வீரர்கள் சிலர், தலைவனின் ஆணையை சிரமேற்கொண்டு அவனது திட்டத்திற்கு பழுதின்றி பண் இசைத்துத்

தொண்டாற்றிய இவ்வீரர் படைகளின் திலகமாய் விளங்கு கிருர் நண்பர் இ. எஸ். தியாகராஜன். "வடவேங்கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்" என்ற சரித்திரச் சான்றின்படி தமிழ்நாடமைக்க வீறிட்டெழுந்த மக்கள் தென் குமரியில் முதன் முதல் போர்க்களம் அமைத்த நேரத்திலே, வடவெல்லையாம் வேங்கடத்தையும் விடமாட்டோமென தமிழ்ப்போர் முரசு கொட்டினர், ம. பொ. சி. ரயில்கள் நிறுத்தப்பட்டன. கூட்டங்கள் கூடின. வீரர்கள் நிறைந்தனர். ஆந்திரரோ, தமிழரோ, என்று ஐயுறும் வண்ணம். மொழி, கலாச்சாரம் இவைகள் மாறுபட்டு தளபதி விநாயகம் கூறியதுபோல, "நான் யார்? தமிழனா? ஆந்திரனா?" என்று ஐயுற்ற தமிழர்கள் பலருண்டு வடவெல்லையில்.

இத்தனை நிலைமைகளையும் இதயத்தில்கொண்டு எழுச்சி பெற்று தமிழரசுக் கழகத்தின் இரும்புத்தூண்களில் ஒன்ருக இணைந்தவர்தான் நண்பர் இ. எஸ். தியாகராஜன். இளமையிலேயே இனப்பற்றுகொண்டவர். மொழிமீது மோகம் மிகுந்தவர். தமிழ்த்தாயின் திருவடி போற்றுதலே தன் கடன் என எண்ணியவர். இந்த இளம் வீரனை ஈன்றளித்த மண் திருத்தணி தாலுகாவைச் சேர்ந்த பொதட்டூர்பேட்டை. 1928-ம் ஆண்டு திரு. ஏகிரி சஞ்சீவி முதலியார் கோவிந்தம்மை இவர்களின் இரண்டாம் மகனாக பிறந்தார், தன் பதினைந்தாம் ஆண்டிலேயே தந்தையை இழந்த இவர், மூத்த சகோதரர் ஏ. ச. சுப்பிரமணியத்துடனும், அன்னையுடனும் அன்பாக வளர்ந்தார். இளமையிலேயே தொழில்துறையில் ஈடுபட்டார். சமூகத்தொண்டிலும் சலியாது உழைத்தார்; தமிழ், தெலுங்கு, இங்கிலீஷ் மொழிகளில் நல்ல பயிற்சியுள்ளவர். ஆந்திர ஆட்சியின் அடக்குமுறையால் மூடப்பட்ட பொதட்டூர்பேட்டை உயர்தரப் பள்ளியும் ஏ. ச. சு. தமிழாசிரியர் பயிற்சி மன்றத்தையும் மீண்டும் துவக்கி இன்றுவரை நடைபெறச் செய்யும் பெருமை இவருக்கே உரியது. தலைவர் ம. பொ. சி. அவர்கள் 1947-மாண்டு ஆகஸ்டு 16-ம் தியதி துவக்கிய

வடக்கெல்லைப் பாதுகாப்புக் குழுவில் முக்கியஉறுப்பின ராய் இருந்துவருகிறார். வடக்கெல்லைப் போராட்டத்தில் 23-6-53-ல் 144 தடை சட்டத்தை மீறியதற்காக சிறை புகுந்தார். 20-6-56-ம் தேதி திருத்தணியிலிருந்து சென்னைக்குச் சென்ற கால்நடைத் தொண்டர் படைக்கு தலைமை வகித்துச்சென்று சென்னையில் 24-9-'56-ம் தேதி சட்டசபை முன்பு தடையை மீறியதற்காக கைது செய்யப் பட்டார். மூன்றும் முறையாக 19-10-'56-ல் சென்னை தலைமை தபால் நிலையம் முன் மறியல் செய்ததற்காக சிறைப் படுத்தப்பட்டார். 27-10-'56-ல் விடுதலை செய்யப்பட்டார்.

தென் தமிழக இணைப்பு விழாவின்போது தலைவர் ம. பொ. சி.யுடன் நாகர்கோவில் வந்து நகரசபை திடலில் சொற்பொழிவாற்றி எல்லை மீட்பில் வெற்றி பெற்ற தென் நில மக்களின் ஒத்துழைப்பை, வடக்கெல்லை மீட்சிக்கு தந்துதவக்கேட்டு, வடக்கெல்லையை மீட்டே தீருவோம், என்று சபதம் செய்த மாவீரர், இ. எஸ். தியாகராஜன்.

அவர் வாழ்க! வளர்க.



# கலைஞர் ஏ. பி. நாகராஜன்.



திரைப்பட வாயிலாக எல்லோராலும் நன்கறியப்பட்ட நண்பர் ஏ. பி நாகராஜன் அவர்களைப்பற்றி விளங்கக் கூறத்தேவையில்லை ஆயினும் தன்னலமற்ற தகைமையாளரின் வாழ்க்கையிலே மறைந்து கிடக்கும் மாணிக்கச் செய்திகளை வெளிப்படக் கூறுவது நமது மாண்பாகும். கலைக்காகத் தொண்டாற்ற கலைக்களத்திலே குதித்து, கலை வளரத் தன்னலியன்ற பணிபுரிந்து, கலைஞராகிய திரு. ஏ. பி. நாகராஜன் அவர்கள் அரசியல் வாழ்க்கையிலே ஒரு ஏகலைவன் மட்டுமல்ல நந்தன் என்றும் கூறலாம். வில்லாசிரியர் துரோணரை அறியாமலே அவருடைய சிலை ஒன்றை சமைத்து வில் பயிற்சி அத்தனையும் பெற்றான் ஏகலைவன்- சிதம்பரத்தைக்காணாமலே சிதம்பரம் பித்துக்கொண்டான் நந்தன். தலைவர் ம. பொ. சியை நேரில் பார்க்காமலேயே அவர் வழியைப் பின்பற்றினார் நாகராஜன்.

நாடகத்துறையிலே நல்ல பணியாற்றி நாட்டங்கொண்டு நாடக வல்லுநர்களான டி. கே. சகோதரர்களின் கம்பெனியில் சேர்ந்து நடித்த ஏ. பி. நாகராஜன் அவர்கள் வெறும் நடிகர் மட்டுமல்ல ஒரு எழுத்தாளரும் கூட. மேடைப்பேச்சிலும் வல்லவர். தன்னைக் கவர்ந்த தமிழரசுக் கழகத்தில் உள்ள பற்றுதலால் நாடக மேடைகளிலும் கதைகளிலும், பேசும்படங்களிலும் தமிழரசுக் கழகக்

கொள்கைகளைப் புகுத்தியவர். தமிழன் என்ற இனப்பற்றால் தமிழ் வளர்க்க கழக ஏடாம் "சாட்டை" என்ற வார இதழின் ஆசிரியராகப் பணிபுரிந்து வருபவர். மாற்றுக் கட்சிக்காரர்களின் தில்லுமுல்லுகளை அம்பலப்படுத்தி அவர்களிடம் நல்ல உதை வாங்கியவர். மதுரை, தமிழரசுக் கழக ஆண்டு விழாவிற்குச் சென்று சொற்பொழிவாற்றி மாற்றுமுகாமினரின் சோடாப்புட்டி அடியையும் தாங்கியவர்.

நால்வர் படத்தின்மூலம் அறிமுகமான திரு. ஏ. பி. நாகராஜன் அவர்கள் தன் முதல் கற்பனையான அந்தப் படத்தில்கூட தலைவர் ம. பொ. சி. அவர்களின் உள்ளத்தைத் திறந்து காட்ட 'கட்டபொம்மன்' கதையை நாடக ரூபமாக நடித்தவர். புகைப்படத்தின் மூலம் மட்டுமே தலைவரை அறிந்திருந்த இவர், தன்னையும் திரைப்படத்தில் "கட்டப்பொம்மன" வேடத்தின் மூலமே தலைவரை அறியச் செய்தவர். அதாவது, திரு ஏ. பி. நாகராஜனும் தலைவர், ம. பொ. சியும் 3–6–54 ல் நாகர்கோவிலில் நடந்த தமிழரசுக்கழக மாநாட்டிற்காகப் புறப்பட்டு வரும்போது 2–6–54-ல் திண்டுக்கல்லில் வைத்துத்தான் நேரில் சந்தித்தனர். அதுவரை படத்தின் வாயிலாகத்தான் இருவரும் ஒருவரை ஒருவர் அறிந்திருந்தனர். ம, பொ. சி. இவரைப் பார்த்து இவர்தானே கட்டபொம்மன் என்று கேட்டாராம், சந்தித்தபோது அந்த அளவுக்கு ம. பொ. சி. அவர்களால் 'கட்டப்பொம்மன்' எனப் புகழப்பட்ட ஒரு சிறந்த கலைஞரை நம் தமிழரசுக்கழகத் தொண்டராகப்பெற்றமை தமிழ்நாட்டுக்கே தனிப்பெருமை—இவர் எழுதிய நால்வர் மாங்கல்யம், நான்பெற்ற செல்வம், பெண்ணரசி, நல்ல தங்கை முதலிய படங்கள் மிகவும் புகழ்பெற்றன என்பது குறிப்பிடத்தக்கது. நாடகம், சினிமா, கதை பத்திரிகை வாயிலாக கழகப்பணியாற்றும் கலைஞரின் தமிழ்பற்று

வாழட்டும்! வளரட்டும்! வளர்க்கட்டும்!

## விவாத வீரர்
# எஸ். கே. பாலசுப்ரமண்யம் M. A. B. L.



தமிழ் நாட்டின் தலை சிறந்த நகரம் செங்கற்பட்டு மாவட்டத்தில் இலங்கும் பூவிருந்த மல்லி தந்த புதுமைத் தொண்டர் திரு எஸ். கே பாலசுப்பிரமணியம் அவர்கள் இளமையிலேயே தேசத் தொண்டாற்ற ஆர்வம் மிகுந்தவரா யிருந்தார். தேசிய இயக்கத்தில் பணியாற்றி பூவிருந்தவல்லி வட்டாரத்தில் இந்திய தேசிய காங்கிரஸ் பரவிச் செயல்பட காரணமாய் இருந்தவர். பேச்சாளர்களின் முதல் வரிசையில் இடம் பெற்று அவையோரை தன் உரை வலிமையால் தன் வசப் படுத்தி பேச்சு மேடையை அலங்கரித்த பெருமை இன்னுருக்குண்டு. வெறும் பேச்சாளர் மட்டுமல்ல, கல்வியின் துணைகொண்டு விவாதத்தன்மையிலும் தர்க்க ரீதியான வாதங்களிலும் தெளிவுடன் பேசும் திறன் பெற்றவர். பொதுநலமே பெரிதாய்க்கொண்டு இந்திய மக்களையே ஒருமுகமாய்க் கவர்ந்த அகில இந்திய காங்கிரஸ் பாதையில் சென்ற சென்னைத் தமிழ்நாடு காங்கிரஸ் பொதுநலத்தை மதியாமல், சுயநலமிகளின் கூடாரமாக மாறிவிட்ட காரணத்தால் காங்கிரஸ் கட்சிக்கே ஒரு முழுக்குப்போட்டு வெளியேறினர். தேசப்பணியே சிறந்த பணியெனக் கொண்ட ஒரு இலட்சிய வாதிக்கு அப்பணியை இழந்து

வாளாவிருக்க முடியுமா? தன்னலமற்ற ஒரு தியாகி தன் தியாகத்தை நாட்டுக்கு ஈயாதிருக்க முடியுமா? ஆதலின், நாட்டை, மொழியை, கலாச்சாரத்தைக் காப்பாற்ற உறுதி கொண்டு, தமிழ் மகனுதலால், தமிழரசுக்கழகக் கோட்டையிலே சிறந்த காவலனுகி முத்தமிழ் காக்க முழங்கும் பீரங்கியாக மாறி, எதிர் கோட்டைகளிலே எக்காளமிடும், குறுகிய மனம்படைத்த குதிரைகளுக்கு வாய்சொல் மூலம் நல்ல சவுக்கடி கொடுத்தார். இவரது இடிமுழக்க இடித்துரைகளால், எதிர்க்கோட்டையே கிடுகிடுத்தது. மாற்றூர் இதயத்தில் இவரைப்பற்றிய எண்ணம் புகுந்ததே தவிர செயலே மறந்தனர்.

(1) யாரிடம் மதிப்புப்பெற்றாலும் அரசியல் தந்திரி ராஜாஜி அவர்களிடம் எளிதில் மதிப்புப்பெற முடியாது அத்தகைய பெரியாரின் மனத்தையும் கவர்ந்து அவரால் பாராட்டப்பட்ட ஒரு சிறந்த சொற்பொழிவாளர்.

(2) கல்வியில், பேச்சில் தொண்டில் மட்டுமல்ல, ஒரு சிறந்த நடிகர். எழுத்தாளர் என்ற இடங்களையும் பூர்த்தி செய்தவர். நடித்தற்கரிய ஔவையார் வேடத்தைத்தாங்கி ஔவை டி., கே. சண்முகம் அவர்களின் புகழ்மொழிக்கு பாத்திரமானவர் "ஔவைக்கும் சுட்ட பழம் வேண்டுமா எனக்கேட்ட முருகனுக்கும் மாருத தொடர்புண்டு. அதனுல் தான் ஒரு சண்முகமும் ஒரு பாலசுப்பிரமணியமும் ஔவையார் பாத்திரமேற்று சிறப்பாக நடிக்க முடிகிறது போலும்" என்று நாரதர் வார இதழ் கூறுமளவுக்கு ஔவையாராக நடிப்பில் மாறியவர் 'எமில்லட்விக்' எழுதியிருக்கும் ஆப்ரகாம் லிங்கன் என்ற புத்தகத்தை ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழியில் பெயர்த்து லிங்கன் என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். சிறுகதைகளும் இவரது முயற்சியில் பரிமளித்ததுண்டு. என்றும், எப்பொழுதும், தமிழ்—தமிழ்நாடு—தமிழ் இனம்— என்ற எண்ணமே தாண்டவமாடும் இதயம் படைத்தவர். சேரன் செங்குட்டுவனுல் இமயம் கண்டாள் தமிழ்த்தாய்.] சோழமன்னர்

போர்த் திறனால், சாவகமும், சிங்களமும், தமிழன்னையின் மடியிலே தவழ்ந்தது- பாண்டியனால், தமிழ் குமரி பண்ணிசைத்தாள். எஸ். கே, பாலசுப்பிரமணியத்தின் வாய்ப்பேச்சால் முன்னைவிட உயர்வு பெற்றாள் என்றால் மிகையாது. M. A. B. L. பட்டம்பெற்று வழக்கறிஞராகப் பணியாற்றும் திரு. எஸ். கே. பா. தமிழகத்தின் விலை மதிக்கமுடியாத முத்து-தீட்டத்தீட்ட மங்காத வெள்ளிய தந்தம் தமிழகத்தின் கருவூலம் அவர் பல்லாண்டு வாழ்ந்து பணிபுரியும் வலுப்பெற்று வாழட்டும் அவர் புகழ் வளரட்டும்.

வாழ்க தமிழகம்! வாழ்க எஸ். கே. பா!!



## கடமை வீரர்

# திரு. காமாட்சிசுந்தரம் (காமராஜ்)



முத்தமிழ் கலைகள் நித்தமும் வளரும் மதுரை மா நகரில் சாப்டூர் கிராமத்தில் பிறந்தார் திரு. காமராஜ்.

காங்கிரஸ் அங்கத்தினராக இருந்த திரு காமராஜ், தமிழரசுக்கழகம் காங்கிரஸில் இருந்து பிரிந்ததும் தானும் பிரிந்துவிட்டார். 1951-ல் இருந்து மதுரை தமிழரசுக்கழகத்தில் பல்வேறு பொறுப்புகள் ஏற்று திறம்பட செயல் புரிந்து வந்தார்,

கடந்த மூன்று ஆண்டுகளாக தமிழரசுக்கழக பொதுச்செயலாளராக, தலைமைக் கழகத்தின் நிபந்தனைகளை கடைப்பிடித்து வெற்றியுடன் நடத்தினர்.

திரு தமிழர்களை துப்பாக்கியால் சுட்டுப்பொசுக்கிய இரக்கமற்ற, நன்றிகெட்ட பட்டம் தாணுபிள்ளைக்கு கறுப்புக்கொடி காட்ட தமிழரசுக்கழக தோழர்களை ஊக்குவித்து அனுப்பினர்.

திரு தேபர் மதுரைக்கு விஜயம் செய்தபோது கறுப்புகொடி காட்டி, அமைதியான ஆர்ப்பாட்டமும் நடத்தினர் திரு. காமராஜ்.

கடந்த ஜனுவரியில் தமிழகத்தில் நடந்த எல்லைப் போராட்டத்தில், தொடர்ந்து ஒரு வார காலம் மதுரையில் மறியல் செய்து பெரும் புரட்சியை உண்டுபண்ணியது

தமிழக ஏட்டில் குறிப்பிடத்தக்கதாகும். அதன் பயனாக அவருக்குக் கிடைத்த பரிசு மதுரை மத்திய சிறையிலே பதினைந்து நாட்கள் சிறைத்தண்டனை.

திரு காமராஜை கைதியாக்கிய காங்கிரஸ் 6–2–56 ல் விடுதலை செய்தது.

சிறை சென்று திரும்பியதால் வாழ்க்கைக்கு உதவிய வேலை பாதிக்கப்பட்டது. அலுவலக நிர்வாகிகளின் நிர்ப்பந்தத்திற் கிணங்க திரு. ம. பொ. சி யின் அனுமதி பெற்று செயலாளர் பதவியை விட்டுவிட்டார்.

செயலாளராக இல்லாவிட்டாலும் கழக பணிகளில் செயல்பட்டுக் கொண்டே இருக்கிறார். பலவித இன்னல் எதிர்ப்புக்களுக்கிடையே கடமையை கடைப்பிடித்து கழகத்திற்காக பணிபுரிகிறார் திரு. காமராஜ். இலட்சியத்தை எப்போது அடைவோம் என்று ஏங்கிநிற்கும் தோழர்களில் திரு. காமராஜும் ஒருவர். அவர் எண்ணம் நிறைவேறட்டும்.

சமதர்ம தமிழரசு மலரட்டும்!

---

# இரயில் நிறுத்தம் செய்த
# இரா. இராமச்சந்திரன்.



திருவண்ணுமலையின் தமிழ்த் தீபச்சுடரான திரு. இரா. இராமச்சந்திரன் அவர்கள் 35 வயது நிறைந்த காளை. 1942-ம் வருட ஆரம்ப முதல் காங்கிரஸ் மஹாசபையின் நடவடிக்கைகளில் ஈடுபட்டு இரண்டு முறை காங்கிரஸ் கமிட்டியில் உறுப்பினராக இருந்து, பணியாற்றி அதன்பின் வடஆற்காடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகி அரும்பெரும் "சேவைகள்" புரிந்திருக்கிருர்.

28–1–51 ல் இருந்து தமிழரசுக் கழகத் தலைவராக திருவண்ணுமலையில் பணியாற்றி வருகிருர். வீரபாண்டிய கட்டபொம்மன் வாலிபர் கழகமும், நகர் மாணவர் மன்ற தமிழரசுக்கழகமும் ஆரம்பித்து தமிழுக்கு வளர்ச்சியை அதிகப்படுத்தினர். அடுத்தாற்போல் கரியமங்கலம் கிராமத்தில் கிளைக்கழகமும் திருவண்ணுமலையில் கீழ்நத்தூர் பகுதியில் ஓர் கிளைக்கழகமும் தோற்றுவித்தார்.

சித்தூர் போராட்டத்தில் ரயில் நிறுத்தம் செய்து 15 தினங்கள் சிறையில் இருந்து வெளிவந்தார். 1953ம் ஆண்டில் மாநாடு நடத்தி டி. எம். மாரிமுத்து அவர்களைக் கொண்டு இயக்கப்பிரசார நாடகம் நடத்தினர்.

அன்னை மொழியாம் தமிழ் அரியாசனம் ஏறி அரசு ஏற்று சமதர்ம தமிழரசு அமையவேண்டி தலைவரின்

ஆணைகளுக்கிணங்க அரும்பாடுபட்டு வருகிறார். மிக எளிய முறையிலே தமிழரசுக் கழகக் கொள்கைகளை மக்கள் மனதிலே பதியவைக்கும் பாங்கினைப்பற்றியே சிந்தித்தவர். ராமனாண்டாலென்ன ராவணனாண்டாலென்ன நம் காரியம் நமக்கு என்று பிறவிப்பயனை உணராத மக்கள் பலரின் குறிப்பாக மாதர்களின் இதயத்திலே தமிழுணர்ச்சி மலரச் செய்யும் வழியைத்தேடி இறுதியில் அவர் கண்டு பிடித்ததே நாடகத்தின் வழி இயக்கப்பிரசாரம் செய்தல் என்பது. நாடகம் நம் தமிழ் மொழியின் இன்றியமையாத ஒரு பகுதி கற்றோரும், மற்றோரும் கண்டு மகிழும் கலை என்பதை உணர்ந்து அவர் கண்ட முடிவு போற்றுதற்குரியது.

லாபத்தையோ தொழில் வளர்ச்சியையோ குறிக் கோளாக எண்ணாமல் தமிழக-தமிழரசுக்கழக, தமிழ் இன வளர்ச்சிக்காக செய்யும் பிரச்சாரமே முக்கியமெனக் கருதிச் செயல்பட்ட வீரர் திலகம் திரு. இரா. இராமச்சந் திரன். தமிழன்னையின் தனி அன்பு சூடு தகைமை பெற்றவர். இத்தகைய இளைஞரை ஈன்றளித்த பெற்றோரின் பெரும் பேறு ஏட்டிலே பொன்னெழுத்து.

வாழ்க இரா. இராமச்சந்திரன்!

---

# இலட்சிய வீரர் கி. ஜனார்த்தனம்.



கள்ளக்குறிச்சியில் 1948-ல் தமிழரசுக் கழகத்தை ஒரு சிலருடன் துவக்கி அல்லும் பகலும் கழகப் பணியிலேயே காலம் கடத்தும் திரு. கி. ஜனார்த்தனம் கள்ளக்குறிச்சியிலேயே பிறந்தவர்.

கள்ளக்குறிச்சியில் தமிழரசு கழகம் ஆரம்பமாகி இரண்டே மாதங்களில் (இரண்டாவது சுதந்திர தினத்தன்று) தமிழரசுக் கழக கொடி கட்டியிருந்த இடத்தில் காங்கிரஸ்காரர்கள், தமிழரசுக்கழக கொடியை அப்புறப்படுத்திவிட்டு தேசீயக்கொடியை கட்டியிருந்தார்கள். இதைக் கண்ட தமிழரசுக்கழகத் தோழர்கள் ஆத்திரம் அடைந்து தேசீயக்கொடி கட்டியிருந்த இடத்திற்கு விரைந்தார்கள். அது சமயம் திரு, ஜனார்த்தனமும் அங்கு விரைந்து சென்று அங்கு நடந்த கலவரத்தை அஹிம்சா முறையில் சீர்படுத்தி, தேசீயக்கொடிக்கும் மதிப்பளித்து போலீசுக்கும் பதில்கூறி தமிழரசுக்கழக கொடியையும் வெற்றிகரமாய் பறக்கவிட்டுவந்தார்.

1949-ல் தமிழரசுக் கழகம் நடத்திய இந்திஎதிர்ப்பில் கள்ளக்குறிச்சியில் இருந்து ஜனார்த்தனம் தலைமையில் நான்கு தோழர்கள் சென்று சட்ட சபையை ஐந்து

நிமிடங்கள் வரை செயலற வைத்தனர், கழகத்தின் முடிவுக்கிணங்க கள்ளக்குறிச்சியில் காங்கிரஸிற்காக தேர்தலில் அயராது உழைத்து இரண்டு இடங்களில் காஙகிரஸை வெற்றிபெறச்செய்தார். மூன்று ஆண்டுகளாக மாநில தமிழரசுக்கழக செயற்குழு உறுப்பினராக இருந்து வருகிறார்.

தேவிகுளம் பீர்மேட்டுக்காக. 28-1-56 ல் போலீஸ் லாறிகள் ஊர் முழுவதும் சுற்றிக்கொண்டிருக்கும்பொழுது கழகத்தோழர்கள் 13 பேர்களுக்கு தலைமை தாங்கி தபால் நிலையத்திற்கு முன் அமைதியாகவும், தைரியமாகவும் மறியல் செய்தார்.

பெப்ருவரி 20-ம் தேதி முதல் முதலில் முன்வந்து சர்வ கட்சி கூட்டணி அமைத்து பொது ஹர்த்தாலுக்கு ஏற்பாடுகள் செய்தார்.

அன்று ஏற்பட்ட கலவரத்தால், போலீஸ், திரு. ஜனார்த்தனம் மீது ஆத்திரமடைந்து வழக்கு தொடுத்தது. பின்னர் வழக்கை வாபஸ் வாங்கிக்கொண்டது சழகப்பிரச்சாரத்திற்காக அரும்பாடு பட்டுவரும் திரு. கி. ஜனார்த்தனம் பல்லாண்டு வாழ்ந்து தமிழகத்திற்கு பணிபுரியட்டும்



## சலியாது உழைக்கும்

# திரு. சா. கல்யாணசுந்தரம், B. A.



சங்கம் வைத்து மொழி வளர்க்கும் பெருமை படைத்த மதுரையில் 1926-ம் ஆண்டு ஜனவரி மாதம் இறுதியில் பிறந்தார். அதே நகரில் பி. ஏ வரை படித்து பட்டம் பெற்றுள்ளார். பின்பு சென்னை சட்டக்கல்லூரியில்சேர்ந்து சட்டமும் படித்துள்ளார் ஆனல் அவர் பட்டம் பெறவில்லை. ஆகையால் திரு. கல்யாண சுந்தரம் பி. ஏ என்றே அழைக்கப்படுகிருர். 1924 ம் வருடம் தேசீய இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டு பல இன்னல்களை அனுபவித்திருக்கிருர். சிதம்பரனரின் வாழ்க்கை வரலாறும் அமரகவியில் கவிதைகளும் இவருக்கு நாட்டுப்பற்றை ஊட்டியது. 1954 ம் ஆண்டு வரை காங்கிரஸ் அங்கத்தினராக இருந்து மதுரையில் இளைஞர் காங்கிரஸ் அமைப்பை ஏற்படுத்தி அதை வளர்த்தார்.

தமிழரசுக்கழகம் காங்கிரஸில் இருந்து பிரிந்த சில மாதங்களில் இவரும் காங்கிரசிலிருந்து விலகி தமிழரசுக் கழக ஊழியனுக மணியாற்றி வருகிருர். இன்று மாறின தமிழரசுக்கழக செயற்குழு உறுப்பினராக இருக்கிருர்.

தலைவர் ம. பொ. சி அவர்களின் பேச்சும் எழுத்துமே தமிழ் இலக்கியத்தின் பால் இவருக்கு பற்று ஏற்படச் செய்தது. சாதாரண ஒரு மேடை பிரசங்கியாக இருந்த இவரை ஒரு பிரபல எழுத்தாளனாக ஆக்கியது நம் தலைவர் ம. பொ. சி தான் என்று கூறுகிறார்.

வாழ்க இவரது தமிழ்ப்பற்று! வளர்க இவரது பணி!

# இலக்கியப் பிரியர் சா. இளமான்.



திருச்சிராப்பள்ளி தந்த தீரர், சாமி புத்தக நிலைய உரிமையாளர் புதுப் புதுக் கருத்துக்களால், இன்பத் தமிழ் தேனை இளைஞர்களின் உள்ளங்களிலே அளித்து வருகிற இன உணர்ச்சி மிக்க இளவல் எழுச்சியுளம் படைத்த எந்தல் இத்தனையும் அமைந்த இன்பத் தமிழகத்தின் வீரரே, திரு. சா. இளமான் அவர்கள்.

1940-ம் ஆண்டு முதல், காங்கிரஸின் அங்கத்தினராகச் சேர்ந்து, எல்லோரையும்போல் தேச விடுதலைக்காக பாடுபட்டார். பற்பல சங்கங்களிலும், நகர காங்கிரஸ் கமிட்டியிலும், பொறுப்பான பதவிகளை வகித்து, அதன் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டு தொண்டாற்றினர்.

காங்கிரசின் போதாத காலத்தில் தமிழரசுக்கழகம் காங்கிரசில் இருந்து பிரிக்கப்பட்டபொழுது தமிழரசுக் கழகத்தின் ஆணைக்கிணங்க திரு. இளமான் அவர்களும் 1954-ல் காங்கிரசில் தனக்கிருந்த பதவிகளை ரத்து செய்து வெளியேறினர்.

காங்கிரசில் இருக்கும்பொழுது எனக்கு தேசீயப் பற்றும், நாட்டுப்பற்றும்தான் இருந்தது. ஆனல் தமிழரசு கழகத்தில் சேர்ந்தபின்தான், தமிழன் என்ற இன உணர்ச்சியும், தமிழ் இலக்கியப்பற்றும் உண்டாகி இருக்கிறது என்று பெருமையுடன் கூறுவார்.

தமிழர்களின் அன்பிற்கும், நல் மதிப்பிற்கும் பாத்திரமான தனித் தமிழ்த்தலைவர் திரு. ம. பொ. சி. அவர்களின் அன்பிற்கு பாத்திரமானவர்.

1951-ம் ஆண்டில் திருச்சியில், முதன் முதலாக தமிழரசுக் கழகத் துவக்கவிழாவிற்கு பெரும் பங்கு கொண்டவர்களில், திரு. இளமான் அவர்களும் ஒருவர்.

கடந்த சில ஆண்டுகளாக திருச்சி மாவட்ட வர்த்தகத் தொழிலாளர்களின் முன்னேற்றத்திற்காக அரும்பாடுபட்டு தொழிலாளர்களின் நல் மதிப்பை பெற்றவர்.

தற்சமயம் திருச்சி மாவட்ட அமைப்பாளராகவும், மாநில தமிழரசுக்கழக செயற்குழு உறுப்பினராகவும் பதவி வகித்து பொறுப்புணர்ந்து செயல்புரிந்து வருகிறார்.

கழக சம்மந்தமான போராட்டங்களில் கலந்து தமிழர்களின் உரிமைக்காக போராடத் தலைவர் திரு. ம.பொ.சி. அவர்களின் ஆணைக்கு காத்திருக்கும் இளஞ்சிங்கங்களிலே திரு. சா. இளமான் அவர்களும் ஒருவர்.

உரிமையை காக்க துடிக்கும் இவர் தொண்டு வளர்க! வாழ்க!

# என்னைப் பற்றி.

என்னைப்பற்றி நானே எழுதும் அளவுக்கு மக்கள் முன் அறிமுகமானவன் என்பதை முதலில் தெரிவிக்கிறேன் ஏனெனில், தொண்டர்கள் என்றுமே பணியாற்றும் பாதையிலேயே செல்வதானல் பார்ப்பவர் கண்களில்கூட தோன்றித் தான் மறைவார்கள். கண்களே மறக்கும்போது கருத்து என்ன செய்யும்.

தலைவர்களை எல்லோரும் அறிவார்கள் ஆனல் எல்லோரையும் தலைவர்களுக்குத் தெரியாது. தலைவர் முதல் தொண்டர் வரை ஒரு இடத்தில் இணைக்கும்போது ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ள இடமேற்படுகிறது. அத்தகய பணியை நிறைவேற்ற என்னொருவனல் முடியாது. ஆதலின் ஒரு கட்சியின் கருவூலங்களில் சிலரை இந்நூல்வழி இணைத்துக் காட்டுகிறேன். மட்டுமல்ல, தியாகிகளையும், அறிஞர்களையும் மக்சள் முன் அறிமுகப்படுத்தும் பணி, மற்றவர்களையும் அந்நிலையில் பண்ணும் சக்தி பெறும் என்ற தலைவர் ம. பொ. சி அவர்களின் பொன் மொழியும் எனக்கு வழி வகுத்துத தந்தது. முயன்றேன், வெற்றி பெற்றேன். இம் முகத்தாலேனும் என் கடனை தமிழரசுக் கழகத்திற்கு செலுத்திக்கொள்வதிலே பெருமைப் படுகிறேன் இப்பெரும் பணி மேலும் வளர உங்கள் கடாக்ஷத்தை செயலில் காட்டுங்கள். வணக்கம்!



என். ஏ. வேலாயுதம்.

எமது அடுத்த வெளியீடு:

# "சீர்திருத்தவாதி"

சிந்தனையைத் தூண்டும் சிறந்த எட்டுச் சிறு கதைகள் அடங்கிய செந்தமிழ் ஏடு!

ஆசிரியர்: என். ஏ. வேலாயுதம்.

★

விரைவில் வெளிவருகிறது!

# "ஓரே மகன்"

தேன் அருவி போன்ற கதை அமைப்பு! தெளிந்த நீரோடையாகும் அதன் வசனத் தொகுப்பு!! படிக்கப் படிக்கத் திகட்டாத கற்பனை ஓவியம்!!! புதுமை, புரட்சி, உணர்ச்சி நிறைந்த உன்னத நாடகம்! திரைப் படத்திற் கேற்ற தெள்ளுதமிழ்க் காவியம்!!

ஆசிரியர்: என். ஏ. வேலாயுதம்.

★★

அச்சில்:

சேர நாட்டுச் செந்தமிழ் வீரன்; மாற்றார் புகு மாசகற்றி மண் காத்த மறவன்; நாட்டுப் பாடலிலே நல்லதோர் நடை போட்ட

# "போர்வீரன் இரவிக்குட்டி"

நாடக உருவிலே நாட்டு மக்கள் இதயத்திலே நடனமாட வருகிறான்!

ஆசிரியர்: எஸ். எஸ். ஆனந்தம்.

★★★

விபரங்களுக்கு:—

அன்பு நிலையம்,

அலெக்சந்திரா ரோடு, நாகர்கோவில்.




1950-ல கன்னியாகுமரியில நடைபெற்ற தமிழ் நாடு எல்லை மாநாட்டில் திரு. ம. பொ. சி. அவர்களால் திறந்து வைக்கப்பட்ட படமே இது.

---